# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| **நூலின் பெயர்** | : | பூம வித்யா |
| **ஆசிரியர்** | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| **மொழி** | : | தமிழ் |
| **வகை** | : | உபதேசம் |
| **முதல் பதிப்பு** | : | 2016 |
| **இரண்டாம் பதிப்பு** | : | 2023 |
| **நூலின் அளவு** | : | டெம்மி |
| **பக்கங்கள்** | : | 69 |
| **தாள்** | : | A5 (5.83” X 8.27”) |
| **எழுத்து அளவு** | : | 14 புள்ளிகள் |
| **உரிமை** | : | அனைவருக்கும் |
| **கட்டமைப்பு** | : | சாதா பைண்டு |
| **கணினி அச்சு** | : | ஓம் கிராபிக்ஸ் |
| **நன்கொடை** | : | அகவிழிப்பு |

# பூம வித்யா

## முன்னுரை

சாந்தோக்ய உபநிஷதம் என்பது சாம வேதத்தில் உள்ள சாந்தோக்ய பிராமணத்தின் ஒரு பகுதியாகும். இது உபநிஷத அறிவைப் பெறுவதற்கான கருப்பொருள்களாக சில கதைகள் உட்பட, பல வசனங்களைக்கொண்ட எட்டு அத்தியாயங்கள் கொண்ட மிகப்பெரிய உபநிஷதங்களில் ஒன்றாகும்.

இந்த உபநிஷதம் பத்து முக்கிய உபநிஷதங்களின் பட்டியலில் 9 - வது இடத்தில் உள்ளது.

உபநிஷதத்தின் பெயர் "**சந்தா**" (ரிதம் - கவிதை, மீட்டர்) என்ற வார்த்தையிலிருந்து பெறப்பட்டது.

**உபதேசத்தின் சாராம்சம்:** - எல்லையற்ற ஆனந்தம் ஸ்ரீ "**பூமைவ சுகம்**"

இந்த உபநிஷதம் பிரம்மனின் உண்மையான இயல்பை, பரம சுயத்தை, ஒரு நொடியும் இல்லாமல் நேரடியாகக் கையாள்கிறது.

இந்த எழாவது அத்தியாயத்தில் "**பூம வித்யா**" என்ற பகுதியில் சொல்லப்படும் கருத்துக்களின் சாரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

- சாகா சந்திர நியாயம் என்ற மூன்றாம் பிறையை தெரிந்துக் கொள்வதற்காக மரக்கிளையைக் காட்டி பிறகு தெரிய வைக்கும் உத்தி.

- ஆனந்தம்தான் பிரம்மஸ்வரூபம் என்று எடுத்துக்கொண்டு, அந்த ஒன்றேயான பிரம்மத்தை உணர வைத்தல்.

❖ பிரம்ம ஞானத்தை அடைய வேண்டுமென்றால், அதற்கு தக்க சத்குருவின் உபதேசம் மூலமாகத்தான் முயற்சி செய்ய வேண்டும்.

❖ இதை அறிய விரும்பும் நடுநிலை அதிகாரிகளுக்கு சில அடிப்படைப் பண்புகள் தேவை, அதையும் இந்த அத்தியாயத்தில் விளக்கப்படுகிறது.

❖ சாதகன் அல்லது மாணவன் குருவிடம் எப்படிப்பட்டவனாக செல்ல வேண்டும் என்பதையும் இந்த வித்யை எடுத்துரைக்கிறது.



# பூம வித்யா

## ॥ सप्तमोऽध्यायः ॥

### ॥ ஸப்தமோऽத்4யாய: ॥

### ॥ ஏழாவது அத்தியாயம் ॥

॥ इति प्रथमः खण्डः ॥

**॥ இதி ப்ரத2ம: க2ண்ட:3 ॥**

**॥ இது முதல் காண்டம் ॥**

अधीहि भगव इति होपससाद सनत्कुमारं नारदस्तं होवाच यद्वेत्थ तेन मोपसीद ततस्त ऊर्ध्वं वक्ष्यामीति स होवाच ॥ ७.१.१ ॥

**அதீ4ஹி ப4க3வ இதி ஹோபஸஸாத3 ஸநத்குமாரம் நாரத3ஸ்தம் ஹோவாச யத்3வேத்த2 தேந மோபஸீத3 ததஸ்த ஊர்த்4வம் வக்ஷ்யாமீதி ஸ ஹோவாச ॥ 7.1.1॥**

நாரதர மகரிஷி சனத்குமார் என்கின்ற ஸத்குருவை அடைந்து, "**பகவானே ஆத்ம ஞானத்தை உபதேசம் செய்யுங்கள்**", என்று வேண்டிக் கேட்டார். மஹான் சனத்குமாரரும் அதற்கு இசைந்து, "*முதலில் நீ எதையெல்லாம் அறிந்து வைத்திருக்கிறாயென்று எனக்கு சொல், நான் அவையெல்லாம் தவிர்த்து அதற்கு மேலானதையெல்லாம் உபதேசிக்கிறேன்*" என்று கூறினார்.

ऋग्वेदं भगवोऽध्येमि यजुर्वेदं सामवेदमाथर्वणं चतुर्थमितिहासपुराणं पञ्चमं वेदानां वेदं पित्र्यं राशिं दैवं निधिं वाकोवाक्यमेकायनं देवविद्यां ब्रह्मविद्यां भूतविद्यां क्षत्रविद्यां नक्षत्रविद्यां सर्पदेवजनविद्यामेतद्भगवोऽध्येमि ॥ ७.१.२ ॥

**ரு’க்3வேத3ம் ப4க3வோऽத்4யேமி யஜுர்வேத3ம் ஸாமவேத3மாத2ர்வணம் சதுர்த2மிதிஹாஸபுராணம் பஞ்சமம் வேதா3நாம் வேத3ம் பித்ர்யம் ராஸிம் தை3வம் நிதி4ம் வாகோவாக்யமேகாயநம் தே3வவித்3யாம் ப்3ரஹ்மவித்3யாம் பூ4தவித்3யாம் க்ஷத்ரவித்3யாம் நக்ஷத்ரவித்3யாம் ஸர்பதே3வஜநவித்3யாமேதத்3ப4க3வோऽத்4யேமி ॥ 7.1.2॥**

நாரதர் அவருக்கு தெரிந்ததையெல்லாம் கூறத்தொடங்கினார். எனக்கு நான்கு வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள், மொழி இலக்கணம், கணித சாஸ்திரம், சகுண அறிவு, தர்க்கம், நீதி சாஸ்திரம், வான சாஸ்திரம், சொல் இலக்கணம், வேதத்தை புரிந்துக் கொள்ளக்கூடிய அங்கங்கள், ஜோதிடம் மற்றும் ஆய கலைகள் அறுபத்திநான்கும் தெரியும் என்று கூறிமுடித்தார்.

सोऽहं भगवो मन्त्रविदेवास्मि नात्मविच्छ्रुतं ह्येव मे भगवद्दृशेभ्यस्तरति शोकमात्मविदिति सोऽहं भगवः शोचामि तं मा भगवाञ्छोकस्य पारं तारयत्विति तं होवाच यद्वै किंचैतदध्यगीष्ठा नामैवैतत् ॥ ७.१.३ ॥

**ஸோऽஹம் ப4க3வோ மந்த்ரவிதே3வாஸ்மி நாத்மவிச்ச்2ருதம் ஹ்யேவ மே ப4க3வத்3த்3ருஸோப்4யஸ்தரதி ஸோகமாத்மவிதி3தி ஸோऽஹம் ப4க3வ: ஸோசாமி தம் மா ப4க3வாஞ்சோ2கஸ்ய பாரம் தாரயத்விதி தம் ஹோவாச யத்3வை கிஞ்சைதத3த்4யகீ3ஷ்டா2 நாமைவைதத் ॥ 7.1.3॥**

இவைகளெல்லாம் வெறும் வார்த்தைகள்தான் என்று அறிந்திருக்கிறேன். **‘உண்மைதான், நான் நிறைய கற்றுக்கொண்டேன்’**, ஆனால், அவைகளின் வார்த்தையின் அர்த்தம் மட்டுமே எனக்குத் தெரியும்.

எனக்கு சுயம் தெரியாது. சுயத்தை அறிந்தவர்களால் மட்டுமே துக்கத்தை வெல்ல முடியும் என்பதை நானறிவேன்.

ஆகவே, அத்தகைய சுயத்தை உணர்கின்ற ஆத்ம ஞானத்தை இன்னும் அடையாதவனாக இருக்கிறேன். உங்களைப் போன்ற ஞானிகளின் மூலமாகத்தான் ஆத்மாவை அறிய முடியும். அத்துடன், எல்லா துயரங்களையும் வென்றவனாக ஆக முடியும். நான் மிகவும் ஆழ்ந்த துயரத்தில் இருக்கிறேன். என்னை இந்த துயரத்திலிருந்து காப்பாற்றுவீர்களாக! என்று நாரதர் வேண்டினார்.

சனத்குமாரர் கூறத்தொடங்கினார், "**நீ எதையெல்லாம் அறிந்து வைத்து இருக்கிறாயோ, அவையெல்லாம் வெறும் வார்த்தைகள்தான், சப்தங்கள்தான் ஆகும்**".

**ஆத்ம ஸ்துதி** - இந்த ஞானத்தை அடைய வேண்டும் என்ற உந்துதல் வேண்டும். நம்மிடம் இருக்கின்ற அறிவினால் எல்லா துயரங்களையும் நிரந்தரமாக போக்கி ஆனந்தத்தை தர இயலாது என்று மனதார அறிய வேண்டும்.

இவ்வாறே, நாரதரின் மனநிலையும் இருந்தது. அவரது புற அறிவு அவரை ஆன்மாவிடம் நெருங்க விடவில்லை. ஆகவே, குருவிடம் செல்லும் போது நம்மிடையே உள்ள அறிவை எல்லாம் நீக்கி விட்டுத்தான் செல்ல வேண்டும்.

ஒருவன் ஒரு பிறவியில் ஒரு விஷயத்தில்தான் நிஷ்டையடைய முடியும். ஆத்மாவை அறிந்தவன் துயரத்தை அனுபவிப்பதில்லை. அக்ஞானம்தான் சோகத்திற்கு காரணம், தன்னை அறியாதுதான் அக்ஞானம் என்று கூறப்படுகிறது. சோகம் என்பது எதிலும் நிறைவின்மை, அடைய வேண்டியது நிறைய இருக்கிறது என்று நினைத்தல். ஆத்மாவை அறிந்தவன் இந்த நிறைவின்மையை நீக்கி விடுகிறான்.

नाम वा ऋग्वेदो यजुर्वेदः सामवेद आथर्वणश्चतुर्थ इतिहासपुराणः पञ्चमो वेदानां वेदः पित्र्यो राशिर्दैवो निधिर्वाकोवाक्यमेकायनं देवविद्या ब्रह्मविद्या भूतविद्या क्षत्रविद्या नक्षत्रविद्या सर्पदेवजनविद्या नामैवैतन्नामोपास्स्वेति ॥ ७.१.४ ॥

**நாம வா ரு'க்$^{3}$வேதோ$^{3}$ யஜுர்வேத:$^{3}$ ஸாமவேத$^{3}$ ஆத$^{2}$ர்வணஸ்சதுர்த$^{2}$ இதிஹாஸபுராண: பஞ்சமோ வேதா$^{3}$நாம் வேத:$^{3}$ பித்ர்யோ ராஸிர்தை$^{3}$வோ நிதி$^{4}$ர்வாகோவாக்யமேகாயநம் தே$^{3}$வவித்$^{3}$யா ப்$^{3}$ரஹ்மவித்$^{3}$யா பூ$^{4}$தவித்$^{3}$யா**

**க்ஷத்ரவித்3யா நக்ஷத்ரவித்3யா ஸர்பதே3வஜநவித்3யா**
**நாமைவைதந்நாமோபாஸ்ஸ்வேதி || 7.1.4 ||**

ரிக் வேதம், யஜுர் வேதம், சாம வேதம், மற்றும் நான்காவதான அதர்வ வேதம், அத்துடன், புராணங்கள், இலக்கணம், சடங்குகள், கணிதம், அறிவியல், தர்க்கம், தார்மீக அறிவியல், ஜோதிடம், வேத அறிவு, உறுப்புகளின் அறிவியல், வில்வித்தை, வானியல், மேலும் இசை, நடனம், மற்றும் பிற நுண்கலைகள் என இவைகளெல்லாம் வெறும் பெயர்கள் மட்டுமே. அதாவது வழிபாட்டுக்குரிய பெயர்கள் (நாமங்கள்) ஆகும்.

அந்த பெயர்களை, அதாவது நாமங்களை பிரம்மமாக உபாஸனை செய்ய வேண்டும். நாமத்தின் தாத்பர்யம் அது ஒரு சப்தம், அது அர்த்தத்தை கொடுக்கிறது, விவகாரத்திற்குட்பட்டது. விவகாரம் என்பது காரியம், காரியம் என்பது மித்யா. ஆகவே, நாரதரின் அறிவெல்லாம் வெறும் சப்தமே.

स यो नाम ब्रह्मेत्युपास्ते यावन्नाम्नो गतं तत्रास्य यथाकामचारो भवति यो नाम
ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवो नाम्नो भूय इति नाम्नो वाव भूयोऽस्तीति तन्मे
भगवान्ब्रवीत्विति ॥ ७.१.५ ॥

**ஸ யோ நாம ப்3ரஹ்மேத்யுபாஸ்தே யாவந்நாம்நோ க3தம் தத்ராஸ்ய**
**யதா2காமசாரோ ப4வதி யோ நாம ப்3ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி**
**ப4க3வோ நாம்நோ பூ4ய இதி நாம்நோ வாவ பூ4யோऽஸ்தீதி தந்மே**
**ப4க3வாந்ப்3ரவீத்விதி || 7.1.5||**

யார் நாமத்தை பிரம்மமாக உபாஸனை செய்கிறார்களோ அவர்கள் இரண்டு விதமான பலன்களை அடைவார்கள். ஒன்று **நிஷ்காம உபாஸனை** அது, அவனை அடுத்த படி நிலைக்கு அழைத்துச் செல்லும் அதுதான் முமுக்ஷுத்வம்.

இரண்டாவது **சகாம உபாஸனை**. இது யார் பிரம்மத்தை நாமமாக உபாஸனை செய்கிறார்களோ, அவர்கள் எந்த அளவுக்கு செய்தார்களோ அந்த

அளவுக்கு பலன் கிடைக்கும். இங்கு நாமம் வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

**நாரதர்:** நாமத்தை (பெயர்களை) விட பெரியதாக ஏதாவது இருக்கிறதா?

**குரு:** இருக்கிறது.

**நாரதர்:** ஐயா, அதை எனக்கு உபதேசம் செய்யுங்கள்.

**குரு:** செய்கிறேன்

..............................................................

॥ इति द्वितीयः खण्डः ॥

**॥ இதி த்3விதீய: க2ண்ட:3 ॥**

**|| இது இரண்டாவது காண்டம் ||**

वाग्वाव नाम्नो भूयसी वाग्वा ऋग्वेदं विज्ञापयति यजुर्वेदं सामवेदमाथर्वणं चतुर्थमितिहासपुराणं पञ्चमं वेदानां वेदं पित्र्यंराशिं दैवं निधिं वाकोवाक्यमेकायनं देवविद्यां ब्रह्मविद्यां भूतविद्यां क्षत्रविद्यां सर्पदेवजनविद्यां दिवं च पृथिवीं च वायुं चाकाशं चापश्च तेजश्च देवांश्च मनुष्यांश्च पशूंश्च वयांसि च तृणवनस्पतीञ्श्वापदान्याकीटपतङ्गपिपीलकं धर्मं चाधर्मं च सत्यं चानृतं च साधु चासाधु च हृदयज्ञं चाहृदयज्ञं च यद्वै वाङ्नाभविष्यन्न धर्मो नाधर्मो व्यज्ञापयिष्यन्न सत्यं नानृतं न साधु नासाधु न हृदयज्ञो नाहृदयज्ञो वागेवैतत्सर्वं विज्ञापयति वाचमुपास्स्वेति ॥ ७.२.१ ॥

**வாக்3வாவ நாம்நோ பூ4யஸீ வாக்3வா ருʼக்3வேத3ம் விஜ்ஞாபயதி யஜுர்வேத3ம் ஸாமவேத3மாத2ர்வணம் சதுர்த2மிதிஹாஸபுராணம் பஞ்சமம் வேதா3நாம் வேத3ம் பித்ர்யம்ராஸிம் தை3வம் நிதி4ம் வாகோவாக்யமேகாயநம் தே3வவித்3யாம் ப்3ரஹ்மவித்3யாம் பூ4தவித்3யாம் க்ஷத்ரவித்3யாம் ஸர்பதே3வஜநவித்3யாம் தி3வம் ச ப்ருʼதி2வீம் ச வாயும் சாகாஸம் சாபஸ்ச தேஜஸ்ச தே3வாம்ஸ்ச மநுஷ்யாம்ஸ்ச பசூம்ஸ்ச வயாம்ஸி ச த்ருʼணவநஸ்பதீஞ்ஸ்வாபதா3ந்யாகீடபதங்க3பிபீலகம் த4ர்மம் சாத4ர்மம் ச ஸத்யம் சாந்ருʼதம் ச ஸாது4 சாஸாது4 ச ஹ்ருʼத3யஜ்ஞம் சாஹ்ருʼத3யஜ்ஞம் ச யத்3வை வாங்நாப4விஷ்யந்ந த4ர்மோ நாத4ர்மோ**

**வ்யஜ்ஞாபயிஷ்யந்ந ஸத்யம் நாந்ரு'தம் ந ஸாது[4] நாஸாது[4] ந ஹ்ரு'த[3]யஜ்ஞோ நாஹ்ரு'த[3]யஜ்ஞோ வாகே[3]வைதத்ஸர்வம் விஜ்ஞாபயதி வாசமுபாஸ்ஸ்வேதி || 7.2.1||**

நாமத்தை விட பெரியதாக இருப்பது வாக்கு (பேச்சு). வாக்கினால் தான் எநத அறிவையும் அடைய முடியும். இதன் மூலம் தான் இன்ப துன்பங்களை அடைய முடியும். நாம் அடையும் அறிவானது கீழ்க்கண்டவாறு வகைப் படுத்தப்படுகிறது.

(a) வேத, இதிகாச, புராணங்களில் அறிவை அடைதல்.

(b) பஞ்ச பூதங்களைப்பற்றிய அறிவை அடைதல்.

(c) தேவ, மனித, விலங்குகள், பறவைகள், மர செடி, கொடிகள், புழு மற்றும் பூச்சிகள் பற்றிய அறிவை அடைதல்.

(d) தர்ம-அதர்மம், உண்மை-பொய், இன்ப-துன்பம் ஆகியவற்றின் அறிவை அடைதல்.

स यो वाचं ब्रह्मेत्युपास्ते यावद्वाचो गतं तत्रास्य यथाकामचारो भवति यो वाचं ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवो वाचो भूय इति वाचो वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.२.२ ॥

**ஸ யோ வாசம் ப்[3]ரஹ்மேத்யுபாஸ்தே யாவத்[3]வாசோ க[3]தம் தத்ராஸ்ய யதா[2]காமசாரோ ப[4]வதி யோ வாசம் ப்[3]ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப[4]க[3]வோ வாசோ பூ[4]ய இதி வாசோ வாவ பூ[4]யோऽஸ்தீதி தந்மே ப[4]க[3]வாந்ப்[3]ரவீத்விதி || 7.2.2||**

நாமத்தை விட பெரியதாக இருப்பது வாக்கு (பேச்சு). வாக்கினால்தான் எநத அறிவையும் அடைய முடியும். இதன் மூலம்தான் இன்ப துன்பங்களை அடைய முடியும். நாம் அடையும் அறிவானது கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தப்படுகிறது.

I. வேத, இதிகாச, புராணங்களில் அறிவை அடைதல்.
II. பஞ்ச பூதங்களைப்பற்றிய அறிவை அடைதல்.
III. தேவ, மனித, விலங்குகள், பறவைகள், மர செடி, கொடிகள், புழு மற்றும் பூச்சிகள் பற்றிய அறிவை அடைதல்.
IV. **தர்ம - அதர்மம், உண்மை - பொய், இன்ப - துன்பம்** ஆகியவற்றின் அறிவை அடைதல் என்பது, வாக்கு மட்டும் இல்லாமலிருந்தால், இவைகளையெல்லாம் நம்மால் அடைய முடியாது. ஆகவே, வாக்குதான் இவையனைத்தையும் பற்றிய அறிவை கொடுக்கிறது. எனவே வாக்கை பிரம்மமாக உபாஸனை செய்வாயாக! என்று குரு கூறினார்.

**சகாம பலன்:** இப்படி செய்வதால் எதையும் சாராதிருக்கும் சக்தியை அடைவார்கள். இங்கு வாக்கு வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

**நாரதர்:** வாக்கை விட பெரியதாக் ஏதாவது இருக்கிறதா?

**குரு:** இருக்கிறது

**நாரதர்:** அதை எனக்கு உபதேசம் செய்யுங்கள்.

**குரு:** செய்கிறேன்.

..............................................................................

॥ इति तृतीयः खण्डः ॥

**|| இதி த்ரு’தீய: க2ண்ட:3 ||**

**|| இது மூன்றாவது காண்டம் ||**

मनो वाव वाचो भूयो यथा वै द्वे वामलके द्वे वा कोले द्वौ वाक्षौ
मुष्टिरनुभवत्येवं वाचं च नाम च मनोऽनुभवति स यदा मनसा मनस्यति
मन्त्रानधीयीयेत्यथाधीते कर्माणि कुर्वीयेत्यथ कुरुते पुत्रांश्च पशूंश्चेच्छेयेत्यथेच्छत
इमं च लोकममुं चेच्छेयेत्यथेच्छते मनो ह्यात्मा मनो हि लोको मनो हि ब्रह्म
मन उपास्स्वेति ॥ ७.३.१ ॥

**மநோ வாவ வாசோ பூ4யோ யதா2 வை த்3வே வாமலகே த்3வே வா கோலே த்3வௌ வாக்ஷௌ முஷ்டிரநுப4வத்யேவம் வாசம் ச நாம ச மநோऽநுப4வதி ஸ யதா3 மநஸா மநஸ்யதி மந்த்ராநதீ4யீயேத்யதா2தீ4தே கர்மாணி குர்வீயேத்யத2 குருதே புத்ராம்ஸ்ச பசூம்ஸ்சேச்சே2யேத்யதே2ச்ச2த இமம் ச லோகமமும் சேச்சே2யேத்யதே2ச்ச2தே மநோ ஹ்யாத்மா மநோ ஹி லோகோ மநோ ஹி ப்3ரஹ்ம மந உபாஸ்ஸ்வேதி || 7.3.1 ||**

வாக்கை காட்டிலும் மேலானது மனம்தான். இதனுடைய இலட்சணம் சங்கல்ப, விகல்பம் உடையது. மனதில் இருக்கின்ற ஒரு குறிப்பிட்ட விருப்பம் அல்லது ஆசைப் பற்றி எண்ணமாக வெளிப்பட்டு, அதை பேசலாம், இதை செய்யலாம் போன்ற விருப்பங்கள் உண்டாகின்றன. இவைகள் நான்கு நிலைகளாக உள்ளன.

அவைகள்,

- ஆசையாக மட்டும் இருத்தல்.
- சிந்தனையை மட்டும் தூண்டி விட்டுவிட்டு, அப்படியே அடங்கி விடுதல்.
- வாக்கிலே வெளிபடுதல்.
- செயலிலே வெளிப்படுதல் போன்றவையாகும்.

நமது உள்ளங்கையில் இரண்டு சிறிய பழங்களை வைத்திருக்க முடிகிறதென்றால், கையானது அந்த அளவுக்குத்தான் உள்ளது. ஆனால், மனம் அப்படியல்ல. மனமானது எத்தனை, எத்தனை எண்ணங்களை வேண்டுமானால் ஏற்றி வைத்துக் கொண்டு, அதிகமாக வியாபித்திருப்பதால், வாக்கையும், நாமத்தையும் மனமானது அனுபவிக்கிறது.

ஒருவன் மந்திரத்தை சதா உச்சரித்துக்கொண்டிருப்பேன் என்று இச்சைக் கொண்டு அதை செய்துக் கொண்டிருப்பான். ஆனால், இன்னும் சிலரோ அகர்த்தவாகவும், அபோக்தாவாகவும் இருப்பார்கள்.

ஆசையுள்ளவர்கள் நான் இந்த இச்சா மனதினால் கர்த்தாவாகவும், போக்தாவாகவும் இருந்துகொண்டு இன்ப துன்பங்களை அனுபவிக்கிறேன் என்பதை அறியாமல் இருப்பார்கள். இங்கு மனம் வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

स यो मनो ब्रह्मेत्युपास्ते यावन्मनसो गतं तत्रास्य यथाकामचारो भवति यो मनो ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवो मनसो भूय इति मनसो वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.३.२ ॥

**ஸ யோ மநோ ப்$^3$ரஹ்மேத்யுபாஸ்தே யாவந்மநஸோ க$^3$தம் தத்ராஸ்ய யதா$^2$காமசாரோ ப$^4$வதி யோ மநோ ப்$^3$ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப$^4$க$^3$வோ மநஸோ பூ$^4$ய இதி மநஸோ வாவ பூ$^4$யோऽஸ்தீதி தந்மே ப$^4$க$^3$வாந்ப்$^3$ரவீத்விதி ॥ 7.3.2॥**

ஒவ்வொருவருடைய மனதிலும் எந்த ஆசையை அடைய வேண்டும் என்ற ஆர்வம் உள்ளதோ, அதை அவர்களிடம் உள்ள இச்சா சக்தியின் காரணமாக அடைந்தே தீருவார்கள்.

இங்கே இச்சை சாதனம், நாம் எதை அடைந்தோமோ அது சாத்யமாக இருக்கிறது.

நாம் எதை அனுபவித்துக்கொண்டிருக்கிறோமோ அது ஒரு காலத்தில் நம்மால் ஆசைபடப்பட்டது.

சகாம பலன் எவ்வளவு தீவிரமாக உபாஸிக்கிறோமோ அவ்வளவு தூரம் வியாபிக்க முடியும். அதனால் விரும்பியதை அடையலாம்.

அதுவே, நிஷ்காம பலன் அடுத்த நிலைக்கு கொண்டு செல்லும்.

*'மனதை பிரம்மமாக வணங்கும் எவரும் மனதின் எல்லைக்குள் தனக்கு விருப்பமானதைத் திணிக்க முடியும், அவைகளை அனுபவிக்க முடியும்'.*

ஆனால், மனதை விட உயர்ந்தது ஒன்று உண்டா? என்று நாரதர் கேட்க, அதற்கு சனத்குமாரர், '**நிச்சயமாக மனதை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது**' என்று பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, **'அதை எனக்கு விளக்குங்கள்'** என்றார்.

.................................................................................

॥ इति चतुर्थः खण्डः ॥

**॥ இதி சதுர்த:$^{2}$ க$^{2}$ண்ட:$^{3}$ ॥**

**|| இது நான்காவது காண்டம் ||**

संकल्पो वाव मनसो भूयान्यदा वै संकल्पयतेऽथ मनस्यत्यथ वाचमीरयति तामु नाम्नीरयति नाम्नि मन्त्रा एकं भवन्ति मन्त्रेषु कर्माणि ॥ ७.४.१ ॥

**ஸங்கல்போ வாவ மநஸோ பூ$^{4}$யாந்யதா$^{3}$ வை ஸங்கல்பயதே(அ)த$^{2}$**
**மநஸ்யத்யத$^{2}$ வாசமீரயதி தாமு நாம்நீரயதி நாம்நி**
**மந்த்ரா ஏகம் ப$^{4}$வந்தி மந்த்ரேஷு கர்மாணி ॥ 7.4.1॥**

மனதை விட பெரியது சங்கல்பம். இப்படி செய்யலாம் அல்லது செய்ய வேண்டாம் என்று பார்க்கின்ற சக்தியுடைய மனதிலுள்ள எண்ணம். நல்லது எது கெட்டது எது என்று பிரித்துப்பார்க்கும் சக்தி. இதன் அடிப்படையில் தான் கிரமமாக பிரவிருத்தியில் ஈடுபடுவோம்.

எனவே எது செய்ய வேண்டும் என்று விரும்புகிறோமோ அதை சங்கல்பம் செய்து விட வேண்டும். இதை வைத்துத்தான் மனதானது செயலில் இறங்கும்.

तानि ह वा एतानि संकल्पैकायनानि संकल्पात्मकानि संकल्पे प्रतिष्ठितानि समक्लृपतां द्यावापृथिवी समकल्पेतां वायुश्चाकाशं च समकल्पन्तापश्च तेजश्च तेषां सं क्लृप्त्यै वर्षं संकल्पते वर्षस्य संक्लृप्त्या अन्नं संकल्पतेऽन्नस्य सं क्लृप्त्यै प्राणाः संकल्पन्ते प्राणानां सं क्लृप्त्यै मन्त्राः संकल्पन्ते मन्त्राणां सं क्लृप्त्यै कर्माणि संकल्पन्ते कर्मणां संक्लृप्त्यै लोकः संकल्पते लोकस्य सं क्लृप्त्यै सर्वं संकल्पते स एष संकल्पः संकल्पमुपास्स्वेति ॥ ७.४.२ ॥

**தாநி ஹ வா ஏதாநி ஸங்கல்பைகாயநாநி ஸங்கல்பாத்மகாநி ஸங்கல்பே ப்ரதிஷ்டி2தாநி ஸமக்லு’பதாம் த்3யாவாப்ரு’தி2வீ ஸமகல்பேதாம் வாயுஸ்சாகாஸம் ச ஸமகல்பந்தாபஸ்ச தேஜஸ்ச தேஷாம் ஸம் க்லு’ப்த்யை வர்ஷம் ஸங்கல்பதே வர்ஷஸ்ய ஸங்க்லு’ப்த்யா அந்நம் ஸங்கல்பதேऽந்நஸ்ய ஸம் க்லு’ப்த்யை ப்ராணா: ஸங்கல்பந்தே ப்ராணாநாம் ஸம் க்லு’ப்த்யை மந்த்ரா: ஸங்கல்பந்தே மந்த்ராணாம் ஸம் க்லு’ப்த்யை கர்மாணி ஸங்கல்பந்தே கர்மணாம் ஸங்க்லு’ப்த்யை லோக: ஸங்கல்பதே லோகஸ்ய ஸம் க்லு’ப்த்யை ஸர்வம் ஸங்கல்பதே ஸ ஏஷ ஸங்கல்ப: ஸங்கல்பமுபாஸ்ஸ்வேதி || 7.4.2 ||**

இந்த உலகத்திலுள்ள பொருட்கள் எல்லாமே, நான் இப்படித்தான் இருப்பேன் என்ற ஸங்கல்பத்தினால்தான் அப்படித் தோன்றுகின்றன.

மழை நான் இப்படித்தான் நீராக பொழிவேன் என்ற ஸங்கல்பத்தினால் அது அவ்வாறாக பெய்து கொண்டிருக்கிறது. அதுப்போல, பஞ்ச பூதங்கள் அவைகளது ஸங்கல்பத்தினால்தான் அந்தந்த குணங்களைப் பெற்று தோற்றமளிக்கிறது.

அதுப்போலவே, எல்லோருக்கும் அறிந்தோ, அறியாமலோ அவர்கள் செய்த ஸங்கல்பத்தினால்தான் அவர்களது வாழ்க்கைமுறை அமைந்திருக்கிறது.

எனவே, நாம் உயர்ந்த தர்ம வாழ்க்கை வாழ வேண்டுமென்றால், அதற்கான ஸங்கல்பத்தை முதலில் செய்தாக வேண்டும். அதன்பிறகு, எல்லாமே கிரமமாக நிறைவேற்றப்பட்டு, நினைத்த மாதிரி வாழ்க்கை நெறியை வடிவமைத்துக் கொண்டு வாழ முடியும்.

அதாவது, **மனம், பேச்சு, பெயர்** முதலியன எல்லாம் சங்கல்பத்தில் ஒன்றிணைகின்றன. சங்கல்பத்திலிருந்து எழுகின்றன, மேலும் சங்கல்பத்தால் ஆதரிக்கப்படுகின்றன.

பூமி தன்னைத்தானே சுற்றுவதுப் போல, காற்று, ஆகாயம், நீர் மற்றும் நெருப்பு போன்றவைகள் எல்லாமே அவைகளின் விருப்பம் போலத்தான் இயங்குகின்றது. அவைகளின் வேலையை அவைகளே தீர்மானிக்கிறது.

அதாவது, மழை விரும்பி பெய்வதினால், விவசாய விளை நிலங்களில் உணவு உற்பத்தியாகின்றது. அந்த உணவின் விருப்பமே உயிர்களுக்கு வாழ்வின் விருப்பம். அவைகளுடைய வாழ்க்கையின் விருப்பம் மகிழ்ச்சி. மகிழ்ச்சியின் நோக்கம் ஆசைகள். ஆசையின் நோக்கம் தேவைகள் என ஒவ்வொன்றும் அனைத்து செயல்பாடுகளின் விருப்பமாகும்.
செயல்களின் விருப்பம் உலகங்களின் விருப்பமாகும், மேலும் உலகங்களின் விருப்பம் எல்லாவற்றின் விருப்பத்தையும் தீர்மானிக்கிறது. இங்கு விருப்பம் வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

स यः संकल्पं ब्रह्मेत्युपास्ते संक्लृप्तान्वै स लोकान्ध्रुवान्ध्रुवः प्रतिष्ठितान्
प्रतिष्ठितोऽव्यथमानानव्यथमानोऽभिसिध्यति यावत्संकल्पस्य गतं तत्रास्य
यथाकामचारो भवति यः संकल्पं ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवः संकल्पाद्भूय इति
संकल्पाद्वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.४.३ ॥

**ஸ ய: ஸங்கல்பம் ப்3ரஹ்மேத்யுபாஸ்தே ஸங்க்லு'ப்தாந்வை ஸ
லோகாந்த்4ருவாந்த்4ருவ: ப்ரதிஷ்டி2தாந்
ப்ரதிஷ்டி2தோऽவ்யத2மாநாநவ்யத2மாநோऽபி4ஸித்4யதி
யாவத்ஸங்கல்பஸ்ய க3தம் தத்ராஸ்ய யதா2காமசாரோ ப4வதி ய:
ஸங்கல்பம் ப்3ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப4க3வ: ஸங்கல்பாத்3பூ4ய இதி
ஸங்கல்பாத்3வாவ பூ4யோऽஸ்தீதி தந்மே ப4க3வாந்ப்3ரவீத்விதி ॥ 7.4.3॥**

எல்லோருக்கும் அறிந்தோ, அறியாமலோ அவர்கள் செய்த ஸங்கல்பத்தினால்தான் அவர்கள் வாழ்க்கை முறை அமைந்திருக்கிறது.

எனவே, நாம் உயர்ந்த தர்ம வாழ்க்கை வாழ வேண்டுமென்றால் முதலில் ஸங்கல்பத்தை செய்தாக வேண்டும். பிறகு எல்லாமே கிரமமாக நிறைவேற்றப்பட்டு நினைத்த மாதிரி வாழ்க்கை நெறியை அமைத்துக் கொள்ளலாம். இங்கு சங்கல்பம் வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

**சகாம பலன்:-** இப்படி ஸங்கல்பத்தை பிரம்மம் என்று எண்ணி தியானித்தால், நாம் ஸங்கல்பம் செய்ததை அடைந்தே தீருவோம்.

நாரதர் கேட்டார், ஐயா, **'சங்கல்பத்தை விட உயர்ந்தது ஏதும் உள்ளதா?'** *'நிச்சயமாக சங்கல்பத்தை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது'* என்று சனத்குமாரர் பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, **'அதை எனக்கு விளக்குங்கள்'** என்றார்.

........................................................................

॥ इति पञ्चमः खण्डः ॥

**॥ இதி பஞ்சம: க2ண்ட:3 ॥**

**|| இது ஐந்தாவது காண்டம் ||**

चित्तं वाव सं कल्पाद्भूयो यदा वै चेतयतेऽथ संकल्पयतेऽथ मनस्यत्यथ वाचमीरयति तामु नाम्नीरयति नाम्नि मन्त्रा एकं भवन्ति मन्त्रेषु कर्माणि ॥ ७.५.१ ॥

**சித்தம் வாவ ஸம் கல்பாத்3பூ4யோ யதா3 வை சேதயதேऽத2 ஸங்கல்பயதேऽத2 மநஸ்யத்யத2 வாசமீரயதி தாமு நாம்நீரயதி நாம்நி மந்த்ரா ஏகம் ப4வந்தி மந்த்ரேஷு கர்மாணி || 7.5.1||**

ஸங்கல்பத்தை விட பெரியது சித்தம். சித்தம் என்றால், சரியாக புரிந்து கொண்டதை தக்கவைத்துக் கொள்ளுதல். நமக்கு துன்பம் வருவது ஏன்? எனில், நாம் சரியாக சூழ்நிலையை புரிந்து கொள்ளாததே காரணமாகும்.

1. அந்த நேரத்தில் அமைந்த சூழ்நிலைக்கேற்றவாறு விஷயங்களை புரிந்து கொள்ளுதல், சூழ்நிலைக்கேற்றவாறு நடந்து கொள்ளுதல்.

2. அதீதம், அனாகம விஷய பிரயோஜன நிரூபணம். அதாவது, கடந்தது, வரப்போவது இவைகளின் பயனை உணரும் சக்தி.

ஒருவருக்கு புத்திசாலித்தனம் என்பது, நிச்சயமாக விருப்பத்தை விட உயர்ந்தது. ஒரு நபர் முதலில் சரியானவற்றை புரிந்து கொள்கிறார், பின்னர், அவர் அதை விரும்புகிறார். அடுத்து அவர் அதை மீண்டும் மீண்டும் சிந்திக்கிறார். பின்னர் அவர் அந்த சங்கல்பத்தின் மூலம் பேச்சு என்பதாக வெளிப்பட்டு, அது ஒரு செயலாக மாறுகின்றது.

இறுதியாக, அவர் பேச்சின் மூலம் வார்த்தையை உச்சரிக்கிறார். பின்னர் அனைத்து வார்த்தைகளும் பெயர்களில் ஒன்றிணைகின்றன. மேலும், அத்தகைய அனைத்து பெயர்களும் செயலில் ஒன்றிணைகின்றன. செயலுக்குக் காரணம் சங்கல்பம் என்பதினால், இங்கு சித்தம் என்பது முக்கிய பங்கு வகிக்கின்றது. இங்கு சித்தம் வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

तानि ह वा एतानि चित्तैकायनानि चित्तात्मानि चित्ते प्रतिष्ठितानि तस्माद्यद्यपि बह्विदचित्तो भवति नायमस्तीत्येवैनमाहुर्यदयं वेद यद्वा अयं विद्वान्नेत्थमचित्तः स्यादित्यथ यद्यल्पविच्चित्तवान्भवति तस्मा एवोत शुश्रूषन्ते चित्तंह्येवैषामेकायनं चित्तमात्मा चित्तं प्रतिष्ठा चित्तमुपास्स्वेति ॥ ७.५.२ ॥

**தாநி ஹ வா ஏதாநி சித்தைகாயநாநி சித்தாத்மாநி சித்தே ப்ரதிஷ்டி$^2$தாநி தஸ்மாத்$^3$யத்$^3$யபி ப$^3$ஹுவித$^3$சித்தோ ப$^4$வதி நாயமஸ்தீத்யேவைநமாஹுர்யத$^3$யம் வேத$^3$ யத்$^3$வா அயம் வித்$^3$வாந்நேத்த$^2$மசித்த: ஸ்யாதி$^3$த்யத$^2$ யத்$^3$யல்பவிச்சித்தவாந்ப$^4$வதி தஸ்மா ஏவோத சுஸ்ரூஷந்தே சித்தம்ஹ்யேவைஷாமேகாயநம் சித்தமாத்மா சித்தம் ப்ரதிஷ்டா$^2$ சித்தமுபாஸ்ஸ்வேதி ॥ 7.5.2 ॥**

ஒருவன் பல நூல்களைக்கற்று வித்வானாக இருந்தாலும், தாம் கற்றதின் சாராம்சத்தை அறியாதவராகவும், அதை சூழ்நிலைக்கு ஏற்றவாறு

மற்றவர்களுக்கு எடுத்துரைக்க இயலாவிட்டால், அவன் கற்றதினால் பயன் ஒன்றுமில்லை.

ஒருவன் கற்றது சிறியதாக இருந்தாலும், அதை சரியாகப் புரிந்து கொண்டு, மற்றவர்களுக்கு தெள்ளத் தெளிவாக விளக்கும் திறனிருந்தால் போதும், அவனை வித்வானாக ஒப்புக்கொள்ளப்படுகிறது.

இவை அனைத்தும் [விருப்பம், மனம் போன்றவை] புத்திசாலித்தனத்தில் ஒன்றிணைகின்றன, புத்திசாலித்தனத்தால் இயக்கப்படுகின்றன, மேலும் புத்திசாலித்தனத்தால் ஆதரிக்கப்படுகின்றன.

அதனால்தான், ஒரு நபர் கற்றவராக இருந்தால், அவரை மக்கள் வரவேற்கின்றனர். ஆனால், அவர் கற்றவற்றில் மந்தமானவராக இருந்தால், மக்கள் அவரைப் புறக்கணித்துவிட்டுச் செல்கிறார்கள்.

மறுபுறம், ஒரு நபர் கற்கவில்லை. ஆனால், அவர் புத்திசாலி என்றால், மக்கள் அவரையும் வரவேற்கிறார்கள். ஆக, இவைகள் அனைத்தையும் ஆளுவது என்பது மனதின் மேம்பட்ட புத்தி சக்தி என்று கூறலாம்.

स यश्चित्तं ब्रह्मेत्युपास्ते चित्तान्वै स लोकान्ध्रुवान्ध्रुवः प्रतिष्ठितान्प्रतिष्ठितोऽव्यथमानानव्यथमानोऽभिसिध्यति यावच्चित्तस्य गतं तत्रास्य यथाकामचारो भवति यश्चित्तं ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवश्चित्ताद्भूय इति चित्ताद्वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.५.३ ॥

**ஸ யஸ்சித்தம் ப்3ரஹ்மேத்யுபாஸ்தே சித்தாந்வை ஸ லோகாந்த்4ருவாந்த்4ருவ:**
**ப்ரதிஷ்டி2தாந்ப்ரதிஷ்டி2தோऽவ்யத2மாநாநவ்யத2மாநோऽபி4ஸித்4யதி**
**யாவச்சித்தஸ்ய க3தம் தத்ராஸ்ய யதா2காமசாரோ ப4வதி யஸ்சித்தம்**
**ப்3ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப4க3வஸ்சித்தாத்3பூ4ய இதி சித்தாத்3வாவ**
**பூ4யோऽஸ்தீதி தந்மே ப4க3வாந்ப்3ரவீத்விதி ॥ 7.5.3॥**

இப்படி புத்திசாலித்தனமான சித்தத்தை பிரம்மமாக தியானித்து கொண்டு இருப்பவர்கள் நிலையான பயமற்ற, சித்தத்தை நன்கு புரிந்து கொண்டு, அதன்

மூலம், புத்திசாலித்தனத்தின் எல்லைக்குள் தான் விரும்பியதை அவர்களால் செய்ய முடிகின்றது.

இங்கு புத்தி வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

நாரதர் கேட்டார், ஐயா, **'புத்திசாலித்தனத்தை விட உயர்ந்தது உள்ளதா?'** *'நிச்சயமாக புத்திசாலித்தனத்தை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது'* என்று சனத்குமாரர் பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, **'அதை எனக்கு விளக்குங்கள்'** என்றார்.

................................................................................

॥ इति षष्ठः खण्डः ॥

**|| இதி ஷஷ்ட:$^{2}$ க$^{2}$ண்ட:$^{3}$ ||**

**|| இது ஆறாவது காண்டம் ||**

ध्यानं वाव चित्ताद्भूयो ध्यायतीव पृथिवी ध्यायतीवान्तरिक्षं ध्यायतीव द्यौर्ध्यायन्तीवापो ध्यायन्तीव पर्वता देवमनुष्यास्तस्माद्य इह मनुष्याणां महत्तां प्राप्नुवन्ति ध्यानापादांशा इवैव ते भवन्त्यथ येऽल्पाः कलहिनः पिशुना उपवादिनस्तेऽथ ये प्रभवो ध्यानापादांशा इवैव ते भवन्ति ध्यानमुपास्स्वेति ॥ ७.६.१ ॥

**த்$^{4}$யாநம் வாவ சித்தாத்$^{3}$பூ$^{4}$யோ த்$^{4}$யாயதீவ ப்ருʼதி$^{2}$வீ த்$^{4}$யாயதீவாந்தரிக்ஷம் த்$^{4}$யாயதீவ த்$^{3}$யௌர்த்$^{4}$யாயந்தீவாபோ த்$^{4}$யாயந்தீவ பர்வதா தே$^{3}$வமநுஷ்யாஸ்தஸ்மாத்$^{3}$ய இஹ மநுஷ்யாணாம் மஹத்தாம் ப்ராப்நுவந்தி த்$^{4}$யாநாபாதா$^{3}$ம்ஸா இவைவ தே ப$^{4}$வந்த்யத$^{2}$ யேऽல்பா: கலஹிந: பிஸுநா உபவாதி$^{3}$நஸ்தேऽத$^{2}$ யே ப்ரப$^{4}$வோ த்$^{4}$யாநாபாதா$^{3}$ம்ஸா இவைவ தே ப$^{4}$வந்தி த்$^{4}$யாநமுபாஸ்ஸ்வேதி || 7.6.1||**

சித்தத்தை விட மேலானது தியானம். தியானம் என்பது மனதை உற்று நோக்கும் திறன், அதாவது, மனதை ஒருமுகப்படுத்துதல்.

ஒருவன் சூழ்நிலையை சரியாக புரிந்துக்கொள்ள வேண்டுமென்றால், அவனது மனம் அமைதியாக இருக்க வேண்டும். இந்த மன அமைதி தியானத்தினாலதான் கிடைக்கும். நம் மனம் அமைதியாக இருக்கும்போது, பார்க்கும் பொருட்களெல்லாம் அமைதியாக இருப்பதுப்போல தோற்றம் அளிக்கும்.

பதவி, பொன், பொருளால் புகழுடன் விளங்குபவர்கள் அனுபவிக்கும் சந்தோசமானது, தியானத்தின் மூலம் அடைகின்ற பலனில் ஒரு சிறு துளிதான் என்று உபநிஷதம் தியானத்தின் பெருமையை உபதேசிக்கிறது.

தியானம் நிச்சயமாக புத்திசாலித்தனத்தை விட மேலானது. பூமி தியானம் செய்வது போல் தெரிகிறது. பூமிக்கும் வானத்துக்கும் இடையே உள்ள இடைவெளி தியானம் செய்வது போல் தெரிகிறது. மேலும், வானம் தியானம் செய்வது போல் தெரிகிறது. தண்ணீர் தியானம் செய்வது போல் தெரிகிறது. மலைகள் தியானம் செய்வது போல் தெரிகிறது. தேவர்களும் மனிதர்களும் தியானம் செய்வது போல் தெரிகிறது.

स यो ध्यानं ब्रह्मेत्युपास्ते यावद्ध्यानस्य गतं तत्रास्य यथाकामचारो भवति यो ध्यानं ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवो ध्यानाद्भूय इति ध्यानाद्वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.६.२ ॥

**ஸ யோ த்4யாநம் ப்3ரஹ்மேத்யுபாஸ்தே யாவத்3த்4யாநஸ்ய க3தம் தத்ராஸ்ய யதா2காமசாரோ ப4வதி யோ த்4யாநம் ப்3ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப4க3வோ த்4யாநாத்3பூ4ய இதி த்4யாநாத்3வாவ பூ4யோऽஸ்தீதி தந்மே ப4க3வாந்ப்3ரவீத்விதி ॥ 7.6.2॥**

தியானம் செய்யாதவர்கள் கலகத்தில் ஈடுபடுவார்கள், சண்டை போடுபவர்களாக இருப்பார்கள், மற்றவர்களை குறைக் கூறிக்கொண்டே இருப்பார்கள். மற்றவர்களிடம் இருக்கும் குறையை அறிவது ஞானம். எனவே தியானத்தை பிரம்மம் என்று தியானிக்க வேண்டும்.

**சகாம பலன்:-** இப்படி தியானிப்பவர்கள் அடையும் பலன், அவர்கள் அறிவும், ஞானமும் உள்ள நிலைக்கு முன்னேறுவார்கள். ஞானம் என்பது வேதங்கள் உபதேசிக்கும் தத்துவ ஞானம் ஆகும். இங்கு தியானம் வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

**'தியானத்தை பிரம்மமாக வழிபடுபவர், தியானத்தின் எல்லைக்குள் தனக்கு விருப்பமானதைச் செய்ய முடியும்.'**

நாரதர் கேட்டார், ஐயா, **'தியானத்தை விட உயர்ந்தது ஏதும் உண்டா?'** *'நிச்சயமாக தியானத்தை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது'* என்று சனத்குமாரர் பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, **'அதை எனக்கு விளக்குங்கள்'** என்றார்.

---

॥ इति सप्तमः खण्डः ॥

**|| இதி ஸப்தம: க²ண்ட:³ ||**

**|| இது ஏழாவது காண்டம் ||**

विज्ञानं वाव ध्यानाद्भूयः विज्ञानेन वा ऋग्वेदं विजानाति यजुर्वेदं सामवेदमाथर्वणं चतुर्थमितिहासपुराणं पञ्चमं वेदानां वेदं पित्र्यंराशिं दैवं निधिं वाकोवाक्यमेकायनं देवविद्यां ब्रह्मविद्यां भूतविद्यां क्षत्रविद्यां नक्षत्रविद्यांसर्पदेवजनविद्यां दिवं च पृथिवीं च वायुं चाकाशं चापश्च तेजश्च देवांश्च मनुष्यांश्च पशूंश्च वयांसि च तृणवनस्पतीञ्छ्वापदान्याकीटपतङ्गपिपीलकं धर्मं चाधर्मं च सत्यं चानृतं च साधु चासाधु च हृदयज्ञं चाहृदयज्ञं चान्नं च रसं चेमं च लोकममुं च विज्ञानेनैव विजानाति विज्ञानमुपास्स्वेति ॥ ७.७.१ ॥

**விஜ்ஞாநம் வாவ த்⁴யாநாத்³பூ⁴ய: விஜ்ஞாநேந வா ரு'க்³வேத³ம் விஜாநாதி யஜுர்வேத³ம் ஸாமவேத³மாத²ர்வணம் சதுர்த²மிதிஹாஸபுராணம் பஞ்சமம் வேதா³நாம் வேத³ம் பித்ர்யம்ராஸிம் தை³வம் நிதி⁴ம் வாகோவாக்யமேகாயநம் தே³வவித்³யாம் ப்³ரஹ்மவித்³யாம் பூ⁴தவித்³யாம் க்ஷத்ரவித்³யாம் நக்ஷத்ரவித்³யாம்ஸர்பதே³வஜநவித்³யாம் தி³வம் ச**

**ப்ரு'தி$^{2}$வீம் ச வாயும் சாகாஸம் சாபஸ்ச தேஜஸ்ச தே$^{3}$வாம்ஸ்ச மநுஷ்யாம்ஸ்ச பஸூம்ஸ்ச வயாம்ஸி ச த்ரு'ணவநஸ்பதீஞ்ச்$^{2}$வாபதா$^{3}$ந்யாகீடபதங்க$^{3}$பிபீலகம் த$^{4}$ர்மம் சாத$^{4}$ர்மம் ச ஸத்யம் சாந்ரு'தம் ச ஸாது$^{4}$ சாஸாது$^{4}$ ச ஹ்ரு'த$^{3}$யஜ்ஞம் சாஹ்ரு'த$^{3}$யஜ்ஞம் சாந்நம் ச ரஸம் சேமம் ச லோகமமும் ச விஜ்ஞாநேநைவ விஜாநாதி விஜ்ஞாநமுபாஸ்ஸ்வேதி || 7.7.1 ||**

தியானத்தை காட்டிலும் மேலானது விக்ஞானம்.

**விக்ஞானம்:** தியானம் போன்றவற்றை எப்படி முறையாக செய்ய வேண்டும் என்ற ஞானம்.

பிறகு அதனால் கிடைக்கும் பலன், கிடைக்காத பலன், எவ்வளவு நாள் செய்ய வேண்டும்? என்ற அறிவும் இருக்க வேண்டும்.

எந்த சாதனையை உபயோகிக்க வேண்டுமென்றால், முதலில் அதை சரியாக உபயோகிக்கும் முறையைப் பற்றிய அறிவை அடைந்த பின்னர்தான் அதை உபயோகிக்க ஆரம்பிக்க வேண்டும்.

விஜ்ஞானம் [அறிவின் நடைமுறை பயன்பாடு] நிச்சயமாக தியானத்தை விட இதுவே மேலானது. விஜ்ஞானத்தின் மூலம் ஒருவர் ரிக் வேதம், யஜூர் வேதம், சாம வேதம் மற்றும் நான்காவதாக உள்ள அதர்வண வேதம் ஆகியவற்றை அறிவார்.

அதன் பின்னர், புராணங்கள், இலக்கணம், சடங்குகள், கணிதம், சகுன அறிவியல், நிலத்தடி வளங்களின் அறிவியல், தர்க்கம், தார்மீக அறிவியல், ஜோதிடம், வேத அறிவு, உறுப்புகளின் அறிவியல், வில் வித்தை, வானியல், மேலும் இசை, நடனம், மற்றும் பிற நுண்கலைகள். மேலும் ஆகாயமும், பூமியும், காற்று, நீர் மற்றும் நெருப்பு போன்றவைகளை விஞ்ஞானத்தின் மூலம் அறிவார்.

அத்துடன், தேவர்கள் மற்றும் மனிதர்கள். கால்நடைகள் மற்றும் பறவைகள். கொடிகள் மற்றும் பெரிய மரங்கள். வேட்டையாடும் விலங்குகள் புழுக்கள், பூச்சிகள் மற்றும் எறும்புகள் என எல்லா சீவர்களின் தகுதி மற்றும் குறைபாடு, மேலும் உண்மை மற்றும் அசத்தியம்; நன்மை மற்றும் தீமை; இனிமையான மற்றும் விரும்பத்தகாத; உணவு மற்றும் தண்ணீர்; இந்த உலகம் என இவைகள் எல்லாவற்றையும் விஜ்ஞானத்தின் மூலம் ஒருவர் அறிவார்.

स यो विज्ञानं ब्रह्मेत्युपास्ते विज्ञानवतो वै स लोकाञ्ज्ञानवतोऽभिसिध्यति यावद्विज्ञानस्य गतं तत्रास्य यथाकामचारो भवति यो विज्ञानं ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवो विज्ञानाद्भूय इति विज्ञानाद्वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.७.२ ॥

**ஸ யோ விஜ்ஞாநம் ப்3ரஹ்மேத்யுபாஸ்தே விஜ்ஞாநவதோ வை ஸ லோகாம்ஜ்ஞாநவதோऽபி4ஸித்4யதி யாவத்3விஜ்ஞாநஸ்ய க3தம் தத்ராஸ்ய யதா2காமசாரோ ப4வதி யோ விஜ்ஞாநம் ப்3ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப4க3வோ விஜ்ஞாநாத்3பூ4ய இதி விஜ்ஞாநாத்3வாவ பூ4யோऽஸ்தீதி தந்மே ப4க3வாந்ப்3ரவீத்விதி ॥ 7.7.2॥**

இந்த ஞானத்தை அடைந்தவர்கள் அடையும் பலனானது என்னவென்றால், அறிவும், வேத ஞானமும் உடைய மனிதர்கள் வாழும் இடத்தில் வசிப்பார்கள். இங்கு விஞ்ஞானம் வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

நாரதர் கேட்டார், ஐயா, '**விஜ்ஞானத்தை விட உயர்ந்தது எதாவது உள்ளதா?**' '*நிச்சயமாக விஜ்ஞானத்தை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது*' என்று சனத்குமாரர் பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, '**அதை எனக்கு விளக்குங்கள்**' என்றார்.

........................................................................

॥ इति अष्टमः खण्डः ॥

**॥ இதி அஷ்டம: க2ண்ட:3 ॥**

**॥ இது எட்டாவது காண்டம் ॥**

बलं वाव विज्ञानाद्भूयोऽपि ह शतं विज्ञानवतामेको बलवानाकम्पयते स यदा बली भवत्यथोत्थाता भवत्युत्तिष्ठन्परिचरिता भवति परिचरन्नुपसत्ता भवत्युपसीदन्द्रष्टा भवति श्रोता भवति मन्ता भवति बोद्धा भवति कर्ता भवति विज्ञाता भवति बलेन वै पृथिवी तिष्ठति बलेनान्तरिक्षं बलेन द्यौर्बलेन पर्वता

बलेन देवमनुष्या बलेन पशवश्च वयांसि च तृणवनस्पतयः
श्वापदान्याकीटपतङ्गपिपीलकं बलेन लोकस्तिष्ठति बलमुपास्स्वेति ॥ ७.८.१ ॥

**ப3லம் வாவ விஜ்ஞாநாத்3பூ4யோऽபி ஹ ஸதம் விஜ்ஞாநவதாமேகோ ப3லவாநாகம்பயதே ஸ யதா3 ப3லீ ப4வத்யதோ2த்தா2தா ப4வத்யுத்திஷ்ட2ந்பரிசரிதா ப4வதி பரிசரந்நுபஸத்தா ப4வத்யுபஸீத3ந்த்3ரஷ்டா ப4வதி ஸ்ரோதா ப4வதி மந்தா ப4வதி போ3த்3தா4 ப4வதி கர்தா ப4வதி விஜ்ஞாதா ப4வதி ப3லேந வை ப்ரு’தி2வீ திஷ்ட2தி ப3லேநாந்தரிக்ஷம் ப3லேந த்3யௌர்ப3லேந பர்வதா ப3லேந தே3வமநுஷ்யா ப3லேந பஸவஸ்ச வயாம்ஸி ச த்ரு’ணவநஸ்பதய: ஸ்வாபதா3ந்யாகீடபதங்க3பிபீலகம் ப3லேந லோகஸ்திஷ்ட2தி ப3லமுபாஸ்ஸ்வேதி || 7.8.1||**

தேகம் சக்தியோடு இருந்தால்தான் உலக விவகாரங்களில் ஈடுபட முடியும். மனோ பலம் நம்மை தீய சக்திகளிடமிருந்து காத்துக்கொள்ள உதவுகிறது.

புத்தி பலம் சூட்சும விஷயங்களை புரிந்துக்கொள்ள உதவுகிறது. இந்திரிய பலம், எவையெல்லாம் விக்ஞானத்தை அடைவதற்கு உதவி புரிகின்றதோ அவையெல்லாம் இந்த பலம்தான்.

எல்லா பலத்தையும் உடைய ஒருவன் நூறு அறிவுடையவர்களை பயமுறுத்தும் சக்தியுடையவர்களாக இருப்பார்கள். தேகம் நல்ல பலத்தோடு இருந்தால்தான், குருவைத்தேடி அவரிருக்கும் இடத்தை அடைந்து, அவருக்கு பணிவிடை செய்து பாடங்களைப் பயில முடியும்.

அவ்வாறு, குருவுக்கு சேவை செய்வது மூலமும், தன்னுடைய பணிவை உணர்த்துவதன் மூலம் அவருடைய பிரியமான சிஷ்யனாகிறான்.

குரு உபதேசிக்கும்போது முழு கவனத்துடன் பாடங்களைக் கேட்க வேண்டும். இப்படி கவனத்துடன் கேட்டவற்றை சிந்தித்துப்பார்த்து அதில் உள்ள சந்தேகங்களை எல்லாம் அவரிடமே கேட்டு, தெளிவு பெற்று, தன் பிறகு அதில் நிலைப்பட வேண்டும்.

இதிலே, மந்தா என்பது குருவின் வார்த்தையை மீண்டும் மீண்டும் சிந்தித்தல். போத்தா என்பது சரியாக புரிந்து கொள்ளுதல். அவ்வாறு, புரிந்துக் கொண்டவைகளை மீண்டும் மீண்டும் சிந்திப்பதால், அதற்கான அறிவை அடைதல் கர்த்தா ஆகின்றது.

இவ்விதம் அறிந்த அறிவின் மூலம் அதனை செயல்படுத்த தொடங்குவான். அத்தகைய விக்ஞாதா செயல் மூலம் பலனை அடைகிறான். ஆக, இவையெல்லாம் கிரமமாக செய்வதற்கு அவனுக்கு சக்தி வேண்டும்.

எனவே, வலிமை பூமியை ஆதரிக்கிறது. இது இடைவெளி, சொர்க்கம், மலைகள், தெய்வங்கள் மற்றும் மனிதர்கள், கால்நடைகள், பறவைகள், கொடிகள் மற்றும் மரங்களை ஆதரிக்கிறது. இது வேட்டையாடும் விலங்குகள் மற்றும் புழுக்கள், பூச்சிகள் மற்றும் எறும்புகளை ஆதரிக்கிறது. இது உலகம் முழுவதையும் ஆதரிக்கிறது.

स यो बलं ब्रह्मेत्युपास्ते यावद्बलस्य गतं तत्रास्य यथाकामचारो भवति यो बलं ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवो बलाद्भूय इति बलाद्वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.८.२ ॥

**ஸ யோ ப$^3$லம் ப்$^3$ரஹ்மேத்யுபாஸ்தே யாவத்$^3$ப$^3$லஸ்ய க$^3$தம் தத்ராஸ்ய யதா$^2$காமசாரோ ப$^4$வதி யோ ப$^3$லம் ப்$^3$ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப$^4$க$^3$வோ ப$^3$லாத்$^3$பூ$^4$ய இதி ப$^3$லாத்$^3$வாவ பூ$^4$யோऽஸ்தீதி தந்மே ப$^4$க$^3$வாந்ப்$^3$ரவீத்விதி || 7.8.2||**

இங்கு பலம் வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

*'வலிமையை வழிபடுபவர்கள், வலிமையின் எல்லைக்குள் தான் விரும்பியதைச் செய்ய முடியும்.'* நாரதர் கேட்டார், ஐயா, '**வலிமையை விட உயர்ந்தது உள்ளதா?**' *'நிச்சயமாக வலிமையை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது,'* என்று சனத்குமாரர் கூறியதுமே, நாரதர், ஐயா, '**அதை எனக்கு உபதேசியுங்கள்**' என்றார்.

॥ इति नवमः खण्डः ॥

|| **இதி நவம: க$^{2}$ண்ட:$^{3}$** ||

|| **இது ஒன்பதாவது காண்டம்** ||

अन्नं वाव बलाद्भूयस्तस्माद्यद्यपि दश रात्रीर्नाश्नीयाद्यद्यु ह जीवेदथवाद्रष्टाश्रोतामन्ताबोद्धाकर्ताविज्ञाता भवत्यथान्नस्यायै द्रष्टा भवति श्रोता भवति मन्ता भवति बोद्धा भवति कर्ता भवति विज्ञाता भवत्यन्नमुपास्स्वेति ॥ ७.९.१ ॥

**அந்நம் வாவ ப$^{3}$லாத்$^{3}$பூ$^{4}$யஸ்தஸ்மாத்$^{3}$யத்$^{3}$யபி த$^{3}$ஸ ராத்ரீர்நாஸ்நீயாத்$^{3}$யத்$^{3}$யு ஹ ஜீவேத$^{3}$த$^{2}$வாத்$^{3}$ரஷ்டாஸ்ரோதாமந்தாபோ$^{3}$த்$^{3}$தா$^{4}$கர்தாவிஜ்ஞாதா ப$^{4}$வத்யதா$^{2}$ந்நஸ்யாயை த்$^{3}$ரஷ்டா ப$^{4}$வதி ஸ்ரோதா ப$^{4}$வதி மந்தா ப$^{4}$வதி போ$^{3}$த்$^{3}$தா$^{4}$ ப$^{4}$வதி கர்தா ப$^{4}$வதி விஜ்ஞாதா ப$^{4}$வத்யந்நமுபாஸ்ஸ்வேதி** ॥ **7.9.1**॥

உணவே சக்தியைக் காட்டிலும் மேலானது. இது எல்லாவகையான சக்திக்கும் காரணமாக இருக்கிறது. இது பிருத்வி பூதத்தை குறிப்பாக உணர்த்துகிறது. பத்து நாட்களுக்கு உணவு உண்ணாமல் உயிரோடு இருக்கும் ஒருவனால் புலன்கள் சக்தியை இழந்து விடுகின்றன. ஆகவே, அவனால் பார்க்க முடியாது, கேட்க முடியாது, மேலும், எதையும் புரிந்துக்கொள்ளும் சக்தியை இழந்திருப்பான். ஆனால் உணவை உண்டபின் அவனுக்கு இழந்த சக்தியெல்லாம் திருமப அடைந்தவனாகிறான்.

எனவே, உணவை வழிபடுங்கள்.

स योऽन्नं ब्रह्मेत्युपास्तेऽन्नवतो वै स लोकान्पानवतोऽभिसिध्यति यावदन्नस्य गतं तत्रास्य यथाकामचारो भवति योऽन्नं ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवोऽन्नाद्भूय इत्यन्नाद्वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.९.२ ॥

**ஸ யோऽந்நம் ப்3ரஹ்மேத்யுபாஸ்தேऽந்நவதோ வை ஸ லோகாந்பாநவதோऽபி4ஸித்4யதி யாவத3ந்நஸ்ய க3தம் தத்ராஸ்ய யதா2காமசாரோ ப4வதி யோऽந்நம் ப்3ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப4க3வோऽந்நாத்3பூ4ய இத்யந்நாத்3வாவ பூ4யோऽஸ்தீதி தந்மே ப4க3வாந்ப்3ரவீத்விதி ॥ 7.9.2॥**

உணவையே பிரம்மமாக தியானித்து கொண்டு இருப்பவர்கள் நல்ல உணவும், நீர் வகைகள் உள்ள உலகத்தை அடைந்து இன்பமாக இருப்பார்கள். உணவைப் போற்றுகிறவன், உணவின் எல்லைக்குள் தன்னிஷ்டப்படி எதையும் செய்ய முடியும்.

நாரதர் ஐயா, '**உணவை விட உயர்ந்தது ஏதும் உண்டா?**' *'நிச்சயமாக உணவை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது'* என்று சனத்குமாரர் பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, '**அதை எனக்கு விளக்குங்கள்**' என்றார்.

................................................................................

॥ इति दशमः खण्डः ॥

**॥ இதி த3ஸம: க2ண்ட:3 ॥**

**|| இது பத்தாவது காண்டம் ||**

आपो वावान्नाद्भूयस्तस्माद्यदा सुवृष्टिर्न भवति व्याधीयन्ते प्राणा अन्नं कनीयो भविष्यतीत्यथ यदा सुवृष्टिर्भवत्यानन्दिनः प्राणा भवन्त्यन्नं बहु भविष्यतीत्याप एवेमा मूर्ता येयं पृथिवी यदन्तरिक्षं यद्द्यौर्यत्पर्वता यद्देवमनुष्यायत्पशवश्च वयांसि च तृणवनस्पतयः श्वापदान्याकीटपतङ्गपिपीलकमाप एवेमा मूर्ता अप उपास्स्वेति ॥ ७.१०.१ ॥

**ஆபோ வாவாந்நாத்3பூ4யஸ்தஸ்மாத்3யதா3 ஸுவ்ரு'ஷ்டிர்ந ப4வதி வ்யாதீ4யந்தே ப்ராணா அந்நம் கநீயோ ப4விஷ்யதீத்யத2 யதா3 ஸுவ்ரு'ஷ்டிர்ப4வத்யாநந்தி3ந: ப்ராணா ப4வந்த்யந்நம் ப3ஹு ப4விஷ்யதீத்யாப ஏவேமா மூர்தா யேயம் ப்ரு'தி2வீ யத3ந்தரிக்ஷம் யத்3த்3யௌர்யத்பர்வதா யத்3தே3வமநுஷ்யாயத்பஸவஸ்ச வயாம்ஸி ச த்ரு'ணவநஸ்பதய: ஸ்வாபதா3ந்யாகீடபதங்க3பிபீலகமாப ஏவேமா மூர்தா அப உபாஸ்ஸ்வேதி || 7.10.1||**

உணவைக் காட்டிலும் மேலானது நீராகும். இது நீர் தத்துவத்தை குறிக்கும். மேலும், நீரானது உணவுக் கிடைப்பதற்கு காரணமாகிறது. இது உலகத்திலுள்ள அனைத்தும் தோற்றம் பெருவதற்கு காரணமாகவும் உள்ளது. அதாவது, **'நீரின்றி அமையது உலகு'** என்பார்கள்.

நீர் நிச்சயமாக உணவை விட மேலானது. அதனால்தான், மழை இல்லை என்றால், **'சாப்பாடு கிடைக்காது'** என, மக்கள் கவலைப்படுகின்றனர்.

ஆனால், நல்ல மழை பெய்தால், **'உணவு தாராளமாக கிடைக்கும்'** என, நினைத்து, மகிழ்ச்சியாக உள்ளனர். ஆகவே, அனைத்தும் தண்ணீர் இருப்பதினால்தான் இருக்கின்றது.

அதாவது, வெவ்வேறு வடிவங்களில்: பூமி, இடைவெளி, சொர்க்கம், மலைகள், கடவுள்கள் மற்றும் மனிதர்கள், கால்நடைகள் மற்றும் பறவைகள், கொடிகள் மற்றும் மரங்கள், வேட்டையாடும் விலங்குகள், புழுக்கள், பூச்சிகள் மற்றும் எறும்புகள் என இவைகள் அனைத்தும் வெவ்வேறு வடிவங்களில் உள்ள நீர்.

எனவே, தண்ணீரை வழிபடுங்கள்.

स योऽपो ब्रह्मेत्युपास्त आप्नोति सर्वान्कामांस्तृप्तिमान्भवति यावदपां गतं तत्रास्य यथाकामचारो भवति योऽपो ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवोऽद्भ्यो भूय इत्यद्भ्यो वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.१०.२ ॥

**ஸ யோऽபோ ப்3ரஹ்மேத்யுபாஸ்த ஆப்நோதி ஸர்வாந்காமாம்ஸ்த்ரு’ப்திமாந்ப4வதி யாவத3பாம் க3தம் தத்ராஸ்ய யதா2காமசாரோ ப4வதி யோऽபோ ப்3ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப4க3வோऽத்3ப்4யோ பூ4ய இத்யத்3ப்4யோ வாவ பூ4யோऽஸ்தீதி தந்மே ப4க3வாந்ப்3ரவீத்விதி ॥ 7.10.2॥**

இப்படிப்பட்ட நீரை பிரம்மமாக தியானிப்பவர்களுக்கு எல்லா விருப்பங்களும் நிறைவேறும்.

*‘நீரை வழிபடுபவர், தான் விரும்பிய அனைத்தையும் பெற்று மகிழ்ச்சி அடைகிறார். தண்ணீரை வழிபடும் ஒருவர், தண்ணீரின் எல்லைக்குள் தான் விரும்பியதைச் செய்ய முடியும்.’*

நாரதர் கேட்டார், ஐயா, **‘தண்ணீரை விட உயர்ந்தது உள்ளதா?’** *‘நிச்சயமாக நீரைக் காட்டிலும் உயர்ந்தது ஒன்று இருக்கிறது’* என்று சனத்குமாரர் பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, **‘அதை எனக்கு விளக்குங்கள்’** என்றார்.

...................................................................

॥ इति एकादशः खण्डः ॥

**॥ இதி ஏகாத3ஸ: க2ண்ட:3 ॥**

**|| இது பதினோராவது காண்டம் ||**

तेजो वावाद्भ्यो भूयस्तद्वा एतद्वायुमागृह्याकाशमभितपति तदाहुर्निशोचति नितपति वर्षिष्यति वा इति तेज एव तत्पूर्वं दर्शयित्वाथापः सृजते तदेतदूर्ध्वाभिश्च तिरश्चीभिश्च विद्युद्भिराह्लादाश्चरन्ति तस्मादाहुर्विद्योतते स्तनयति वर्षिष्यति वा इति तेज एव तत्पूर्वं दर्शयित्वाथापः सृजते तेज उपास्स्वेति ॥ ७.११.१ ॥

**தேஜோ வாவாத்3ப்4யோ பூ4யஸ்தத்3வா ஏதத்3வாயுமாக்3ரு’ஹ்யாகாஸமபி4தபதி ததா3ஹூர்நிஸோசதி நிதபதி வர்ஷிஷ்யதி வா இதி தேஜ ஏவ தத்பூர்வம் த3ர்ஸயித்வாதா2ப: ஸ்ரு’ஜதே ததே3ததூ3ர்த்4வாபி4ஸ்ச திரஸ்சீபி4ஸ்ச வித்3யுத்3பி4ராஹ்ராதா3ஸ்சரந்தி தஸ்மாதா3ஹூர்வித்3யோததே ஸ்தநயதி வர்ஷிஷ்யதி வா இதி தேஜ ஏவ தத்பூர்வம் த3ர்ஸயித்வாதா2ப: ஸ்ரு’ஜதே தேஜ உபாஸ்ஸ்வேதி ॥ 7.11.1॥**

நீரைக் காட்டிலும் மேலானது நெருப்பாகும். இது நீருக்கு காரணமாக இருக்கிறது. இது வாயுவை சூடாக்குவதால் மக்கள் காற்று மண்டலம் சூடாக இருப்பாதாக உணர்ந்து இன்று மழை வரலாம் என்று கூறுவர். மேலும் இடி, மின்னல் உருவாகி மழை வருவதற்கு காரணமாகிறது.

स यस्तेजो ब्रह्मेत्युपास्ते तेजस्वी वै स तेजस्वतो
लोकान्भास्वतोऽपहततमस्कानभिसिध्यति यावत्तेजसो गतं तत्रास्य यथाकामचारो
भवति यस्तेजो ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवस्तेजसो भूय इति तेजसो वाव
भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.११.२ ॥

**ஸ யஸ்தேஜோ ப்3ரஹ்மேத்யுபாஸ்தே தேஜஸ்வீ வை ஸ தேஜஸ்வதோ லோகாந்பா4ஸ்வதோऽபஹததமஸ்காநபி4ஸித்4யதி யாவத்தேஜஸோ க3தம் தத்ராஸ்ய யதா2காமசாரோ ப4வதி யஸ்தேஜோ ப்3ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப4க3வஸ்தேஜஸோ பூ4ய இதி தேஜஸோ வாவ பூ4யோऽஸ்தீதி தந்மே ப4க3வாந்ப்3ரவீத்விதி ॥ 7.11.2॥**

இப்படிப்பட்ட சக்தியை உடைய அக்னியை உபாஸனை செய்தால், அவர்கள் தேஜஸான உடலைப்பெற்று, இன்பமாக இருப்பார்கள்.

எவன் நெருப்பை வழிபடுகிறானோ அவனே பிரகாசமாகி, இருளின் சாயல் இல்லாத வெளிச்சமான நிலையில் அனைத்தையும் அறிகிறான். அக்கினியை வழிபடும் ஒருவர், நெருப்பின் எல்லைக்குள் தான்

விரும்பியதைச் செய்ய முடியும். இங்கு அக்னி வழிபாட்டிற்கு உரியதாகப் பார்க்கப்படுகின்றது.

நாரதர் கேட்டார், ஐயா, **'தேஜஸை விட உயர்ந்தது உள்ளதா?'**

ஆம்! *'நிச்சயமாக தேஜஸை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது'* என்று சனத்குமாரர் பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, **'அதை எனக்கு விளக்குங்கள்'** என்றார்.

---

॥ इति द्वादशः खण्डः ॥

**|| இதி த்³வாத³ஸ: க²ண்ட:³ ||**

**|| இது பனிரெண்டாவது காண்டம் ||**

आकाशो वाव तेजसो भूयानाकाशे वै सूर्याचन्द्रमसावुभौ विद्युन्नक्षत्राण्यग्निराकाशेनाह्वयत्याकाशेन शृणोत्याकाशेन प्रतिशृणोत्याकाशे रमत आकाशे न रमत आकाशे जायत आकाशमभिजायत आकाशमुपास्स्वेति ॥ ७.१२.१ ॥

**ஆகாஸோ வாவ தேஜஸோ பூ⁴யாநாகாஸோ வை ஸூர்யாசந்த்³ரமஸாவுபௌ⁴ வித்³யுந்நக்ஷத்ராண்யக்³நிராகாஸோநாஹ்வயத்யாகாஸோந ஸ்ரு'ணோத்யாகாஸோந ப்ரதிஸ்ரு'ணோத்யாகாஸோ ரமத ஆகாஸோ ந ரமத ஆகாஸோ ஜாயத ஆகாஸமபி⁴ஜாயத ஆகாஸமுபாஸ்ஸ்வேதி || 7.12.1||**

அக்னியைக் காட்டிலும் மேலானது ஆகாயம். மற்ற நான்கு பூதங்களும் இதிலிருந்துதான் தோன்றியுள்ளது. சூரியனும், சந்திரனும் ஆகாசத்தில்தான் காட்சியளிக்கிறது.

ஆகாசத்தின் இருப்பினால்தான் நாம் பேசுவது பிறரால் கேட்கப் படுகின்றது. நாம் அனுபவிக்கும் சுக, துக்கங்களுக்கும், உயிரினங்கள் தோன்றி மறைவதற்கும் காரணமாக இருப்பதும் இதுவேதான்.

எனவே, ஆகாசத்தை வழிபடுங்கள்.

स य आकाशं ब्रह्मेत्युपास्त आकाशवतो वै स
लोकान्प्रकाशवतोऽसंबाधानुरुगायवतोऽभिसिध्यति यावदाकाशस्य गतं तत्रास्य
यथाकामचारो भवति य आकाशं ब्रह्मेत्युपास्तेऽस्ति भगव आकाशाद्भूय इति
आकाशाद्वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.१२.२ ॥

**ஸ ய ஆகாஸம் ப்$^{3}$ரஹ்மேத்யுபாஸ்த ஆகாஸவதோ வை ஸ**
**லோகாந்ப்ரகாஸவதோऽஸம்பா$^{3}$தா$^{4}$நுருகா$^{3}$யவதோऽபி$^{4}$ஸித்$^{4}$யதி**
**யாவதா$^{3}$காஸஸ்ய க$^{3}$தம் தத்ராஸ்ய யதா$^{2}$காமசாரோ ப$^{4}$வதி**
**ய ஆகாஸம் ப்$^{3}$ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப$^{4}$க$^{3}$வ ஆகாஸாத்$^{3}$பூ$^{4}$ய இதி**
**ஆகாUU◌ாத்$^{3}$வாவ பூ$^{4}$யோऽஸ்தீதி தந்மே ப$^{4}$க$^{3}$வாந்ப்$^{3}$ரவீத்விதி**
**॥ 7.12.2॥**

எனவே ஆகாசத்தை உபாஸிக்க வேண்டும். இதை உபாஸிப்பவர்கள் அடையும் பயனாவது மிகவும் பெரிய இடத்தையும், ஒளியுடன் கூடியதும், எந்த குறைகளும் இல்லாத நிலையை அடைந்து இன்பமாக இருப்பார்கள்.

'ஆகாசத்தை [வெளியை] வழிபடுபவர்கள் விசாலமான, பிரகாசமான, அனைத்து குறைபாடுகளிலிருந்தும் விடுபட்ட, விரிவான நிலையை அடைகிறார்.

ஆகாசத்தை வழிபடுபவர், ஆகாசத்தின் எல்லைக்குள் தான் விரும்பியதைச் செய்ய முடியும்.

நாரதர் கேட்டார், ஐயா, **'ஆகாசத்தை விட உயர்ந்தது ஏதும் உண்டா?'**

*'நிச்சயமாக ஆகாசத்தை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது'* என்று சனத்குமாரர் பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, **'அதை எனக்கு விளக்குங்கள்'** என்றார்.

........................................................................

॥ इति त्रयोदशः खण्डः ॥

**|| இதி த்ரயோத³ஸ: க²ண்ட:³ ||**

**|| இது பதிமூன்றாவது காண்டம் ||**

स्मरो वावाकाशाद्भूयस्तस्माद्यद्यपि बहव आसीरन्न स्मरन्तो नैव ते कंचन शृणुयुर्न मन्वीरन्न विजानीरन्यदा वाव ते स्मरेयुरथ शृणुयुरथ मन्वीरन्नथ विजानीरन्स्मरेण वै पुत्रान्विजानाति स्मरेण पशून्स्मरमुपास्स्वेति ॥ ७.१३.१ ॥

**ஸ்மரோ வாவாகாஸாத்³பூ⁴யஸ்தஸ்மாத்³யத்³யபி ப³ஹவ ஆஸீரந்ந ஸ்மரந்தோ நைவ தே கஞ்சந ஸ்ரு'ணுயுர்ந மந்வீரந்ந விஜாநீரந்யதா³ வாவ தே ஸ்மரேயுரத² ஸ்ரு'ணுயுரத² மந்வீரந்நத² விஜாநீரந்ஸ்மரேண வை புத்ராந்விஜாநாதி ஸ்மரேண பஸூந்ஸ்மரமுபாஸ்ஸ்வேதி || 7.13.1||**

ஞாபகசக்தி ஆகாசத்தை காட்டிலும் மேலானது. நம்மைச்சுற்றி நமக்கு நன்கு தெரிந்தவர்கள் இருந்தாலும் நினைவு (ஞாபகம்) இல்லையென்றால், அவர்களிடம் உரையாட முடியாது, யாரென்றும் அறிய முடியாது, அவர்களைப் பற்றி சிந்திக்கவும் முடியாது.

ஆனால் ஞாபகசக்தி வந்துவிட்டால் எல்லாமும் நன்றாக தெரியவரும்.

எனவே, நினைவாற்றல் நிச்சயமாக ஆகாசத்தை விட மேலானது.

இதனால்தான், பலர் ஒன்று சேர்ந்தாலும் அவர்களின் நினைவாற்றல் தோல்வியடைந்தால், அவர்களால் எதையும் கேட்கவோ சிந்திக்கவோ அறியவோ முடியாது.

ஆனால், அவர்கள் தன்னை தன் நிலையை உணர்ந்த விழிப்பில் வைத்திருந்தால், அவர்களால் கேட்கவும், சிந்திக்கவும், அறியவும் முடியும். அத்தகைய நினைவகத்தின் மூலம் ஒருவர் தனது குழந்தைகளையும், விலங்குகளையும் பிரித்து அறிவார். எனவே, நினைவை வணங்குங்கள்.

स यः स्मरं ब्रह्मेत्युपास्ते यावत्स्मरस्य गतं तत्रास्य यथाकामचारो भवति यः
स्मरं ब्रह्मेत्युपास्तेऽस्ति भगवः स्मराद्भूय इति स्मराद्वाव भूयोऽस्तीति तन्मे
भगवान्ब्रवीत्विति ॥ ७.१३.२ ॥

**ஸ ய: ஸ்மரம் ப்$^{3}$ரஹ்மேத்யுபாஸ்தே யாவத்ஸ்மரஸ்ய க$^{3}$தம் தத்ராஸ்ய**
**யதா$^{2}$காமசாரோ ப$^{4}$வதி ய: ஸ்மரம் ப்$^{3}$ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப$^{4}$க$^{3}$வ:**
**ஸ்மராத்$^{3}$பூ$^{4}$ய இதி ஸ்மராத்$^{3}$வாவ பூ$^{4}$யோऽஸ்தீதி தந்மே**
**ப$^{4}$க$^{3}$வாந்ப்$^{3}$ரவீத்விதி ॥ 7.13.2॥**

எனவே ஞாபகசக்தியை பிரம்மமாக உபாஸிக்க வேண்டும். இதை உபாஸிப்பவர்கள் அடையும் பயனாவது இது எவ்வளவு தூரம் வியாபித்திருக்கிறதோ அவ்வளவு தூரம் அனைத்தையும் வியாபிக்கும் திறனடைவார்கள்.

'நினைவை வணங்குபவனுக்கு நினைவாற்றல் குன்றாமல், அவன் இருக்கும் வரை சுதந்திரமான இயக்கம் உண்டு.

நாரதர் ஐயா, **'நினைவை விட உயர்ந்தது உள்ளதா?'** ஆம்! *'நிச்சயமாக நினைவை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது'* என்று சனத்குமாரர் பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, **'அதை எனக்கு விளக்குங்கள்'** என்றார்.

---

॥ इति चतुर्दशः खण्डः ॥

**|| இதி சதுர்த³ஸ: க²ண்ட:³ ||**

**|| இது பதினான்காவது காண்டம் ||**

आशा वाव स्मराद्भूयस्याशेद्धो वै स्मरो मन्त्रानधीते कर्माणि कुरुते पुत्रांश्च पशूंश्चेच्छत इमं च लोकममुं चेच्छत आशामुपास्स्वेति ॥ ७.१४.१ ॥

**ஆஸா வாவ ஸ்மராத்³பூ⁴யஸ்யாஸோத்³தோ⁴ வை ஸ்மரோ மந்த்ராநதீ⁴தே கர்மாணி குருதே புத்ராம்ஸ்ச பஸூம்ஸ்சேச்ச²த இமம் ச லோகமமும் சேச்ச²த ஆஸாமுபாஸ்ஸ்வேதி || 7.14.1||**

இங்கு சமஸ்க்ருத மொழியில் ஆசா (ஆசை) என்பது நம்பிக்கையைக் குறிக்கும்.

எனவே, நம்பிக்கையை உபாஸிக்க வேண்டும். இதை உபாஸிப்பவர்கள் அடையும் பயனாவது, அந்த நம்பிக்கையின் வாயிலாகத்தான் எதையுமே ஏற்றுக் கொள்ள முடியும். இல்லையென்றால், மனம் எதிலும் ஆர்வம் காட்டாது. ஆகவே, நம்பிக்கை என்பது ஒருவருக்கு எவ்வளவு தூரம் வியாபித்திருக்கிறதோ அவ்வளவு தூரம் அவர்களும் அனைத்தையும் அறியும் திறனடைவார்கள்.

ஆக, நினைவாற்றலை விட நம்பிக்கை நிச்சயமாக சிறந்தது. நம்பிக்கை ஒரு நபரின் நினைவாற்றலைத் தூண்டுகிறது. மேலும், அவர்கள் கற்கும் மந்திரங்களை நம்பிக்கையுடன் உபாஸிக்கவும் முடிகின்றது. அத்துடன், அந்த மந்திரங்களை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, அவைகள் மூலம் சடங்குகளைச் செய்வதற்கு, அவரது நினைவகத்தைப் பயன்படுத்துகிறார்.

மேலும் ஒருவரின் இம்மையையும், மறுமையையும் நம்பிக்கையின் அடிப்படையில்தான் அமைந்திருக்கின்றது.

எனவே, நம்பிக்கையை வழிபடுங்கள்.

स य आशां ब्रह्मेत्युपास्त आशयास्य सर्वे कामाः समृध्यन्त्यमोघा हास्याशिषो भवन्ति यावदाशाया गतं तत्रास्य यथाकामचारो भवति य आशां ब्रह्मेत्युपास्तेऽस्ति भगव आशाया भूय इत्याशाया वाव भूयोऽस्तीति तन्मे भगवान्ब्रवीत्विति ॥ ७.१४.२ ॥

**ஸ ய ஆஸாம் ப்3ரஹ்மேத்யுபாஸ்த ஆஸயாஸ்ய ஸர்வே காமா: ஸம்ரு'த்4யந்த்யமோகா4 ஹாஸ்யாஸிஷோ ப4வந்தி யாவதா3ஸாயா க3தம் தத்ராஸ்ய யதா2காமசாரோ ப4வதி ய ஆஸாம் ப்3ரஹ்மேத்யுபாஸ்தேऽஸ்தி ப4க3வ ஆஸாயா பூ4ய இத்யாஸாயா வாவ பூ4யோऽஸ்தீதி தந்மே ப4க3வாந்ப்3ரவீத்விதி || 7.14.2||**

நம்பிக்கையானது ஞாபகசக்தியை காட்டிலும் மேலானது. நம்பிக்கையின் தூண்டுதலால்தான் எதையும் நாம் அறிய ஆவல் கொள்வோம். அத்துடன் அவைகளும் நம் நினைவுக்கு வரும்.

பிறகு அதை நிறைவேற்ற செயலில் இறங்குவோம். அதன் பலனை அடைவோம்.

ஆகவே, நம்பிக்கையினால்தான் எல்லா விருப்பங்களும் ஒருவனுக்கு நிறைவேறுகின்றது. நம்பிக்கையும் வீண் போகாது.

எனவே, நம்பிக்கையை உபாஸிக்க வேண்டும்.

நாரதர் கேட்டார், ஐயா, '**நம்பிக்கையை விட உயர்ந்தது எதாவது உள்ளதா**?'

ஆம்! *'நிச்சயமாக நம்பிக்கையை விட உயர்ந்தது ஒன்று இருக்கிறது'* என்று சனத்குமாரர் பதிலளித்தார்.

அப்போது நாரதர், ஐயா, '**அதை எனக்கு விளக்குங்கள்**' என்றார்.

..............................................................

॥ इति पञ्चदशः खण्डः ॥

**॥ இதி பஞ்சத$^{3}$ஸ: க$^{2}$ண்ட:$^{3}$ ॥**

**|| இது பதினைந்தாவது காண்டம் ||**

प्राणो वा आशाया भूयान्यथा वा अरा नाभौ समर्पिता एवमस्मिन्प्राणे सर्वंसमर्पितं प्राणः प्राणेन याति प्राणः प्राणं ददाति प्राणाय ददाति प्राणो ह पिता प्राणो माता प्राणो भ्राता प्राणः स्वसा प्राण आचार्यः प्राणो ब्राह्मणः ॥ ७.१५.१ ॥

**ப்ராணோ வா ஆஸாயா பூ$^{4}$யாந்யதா$^{2}$ வா அரா நாபௌ$^{4}$ ஸமர்பிதா ஏவமஸ்மிந்ப்ராணே ஸர்வம்ஸமர்பிதம் ப்ராண: ப்ராணேந யாதி ப்ராண: ப்ராணம் த$^{3}$தா$^{3}$தி ப்ராணாய த$^{3}$தா$^{3}$தி ப்ராணோ ஹ பிதா ப்ராணோ மாதா ப்ராணோ ப்$^{4}$ராதா ப்ராண: ஸ்வஸா ப்ராண ஆசார்ய: ப்ராணோ ப்$^{3}$ராஹ்மண: ॥ 7.15.1॥**

நம்பிக்கையைக் காட்டிலும் மேலானது பிராணன்.

ஹிரண்யகர்ப்பன், அனைத்து சூட்சும பூதங்களுக்கு ஆதாரமாக இருக்கிறார். இவரே ஸர்வாத்மாவாக இருக்கிறார்.

விராட் அனைத்து ஸ்தூலத்துக்கும் ஆதாரமாக இருக்கிறார்.

இந்த உலகிலுள்ள ஜீவர்கள் அனைவரும் ஹிரண்யகர்ப்பனாகவே பாவிக்கப்படுகிறது.

**(உ - ம்)** மாதா, பிதா, சகோதரன், போன்றவர்கள் எல்லாமே ஒன்றுதான்.

பிராணா [முக்கிய சக்தி] நிச்சயமாக நம்பிக்கையை விட மேலானது.

ஒரு சக்கரத்தில் உள்ள ஸ்போக்குகள் மையத்தில் இணைக்கப்பட்டு உள்ளதைப் போலவே, அனைத்தும் பிராணனிடம் இணைக்கப்பட்டுள்ளது.

பிராணன் அதன் சொந்த சக்தி மூலம் செயல்படுகிறது [அதாவது, பிராணன் என்பது வழிமுறை மற்றும் முடிவு].

பிராணன் பிராணனுக்கு பிராணனை அளிக்கிறது, பிராணன் பிராணனை நோக்கி செலுத்துகிறது. பிராணன் தந்தை, பிராணன் தாய், பிராணன் சகோதரன், பிராணன் சகோதரி, பிராணன் ஆசிரியர், பிராணன் பிராமணன்.

स यदि पितरं वा मातरं वा भ्रातरं वा स्वसारं वाचार्यं वा ब्राह्मणं वा
किंचिद्भृशमिव प्रत्याह धिक्त्वास्त्वित्येवैनमाहुः पितृहा वै त्वमसि मातृहा वै
त्वमसि भ्रातृहा वै त्वमसि स्वसृहा वै त्वमस्याचार्यहा वै त्वमसि ब्राह्मणहा वै
त्वमसीति ॥ ७.१५.२ ॥

**ஸ யதி3 பிதரம் வா மாதரம் வா ப்4ராதரம் வா ஸ்வஸாரம் வாசார்யம்**
**வா ப்3ராஹ்மணம் வா கிஞ்சித்3ப்4ரு’ஸமிவ ப்ரத்யாஹ**
**தி4க்த்வாஸ்த்வித்யேவைநமாஹு: பித்ரு’ஹா வை த்வமஸி மாத்ரு’ஹா வை**
**த்வமஸி ப்4ராத்ரு’ஹா வை த்வமஸி ஸ்வஸ்ரு’ஹா வை த்வமஸ்யாசார்யஹா**
**வை த்வமஸி ப்3ராஹ்மணஹா வை த்வமஸீதி ॥ 7.15.2॥**

பெரியவர்களை மரியாதையின்றி பேசுவது அவர்களை கொன்று விடுவதற்கு சமமாக கருதப்படும்.

இப்படிப்பட்டவர்களை சான்றோர்கள் ஒதுக்கி வைப்பார்கள். ஆனால் இறந்து விட்ட தாய், தந்தை இவர்களின் உடலை தீயிலிட்டு கொளுத்தினால் யாரும் ஒன்றும் சொல்ல மாட்டார்கள்.

ஏனென்றால் பிராணனானது உடலை விட்டு சென்று விட்டதால் இறந்த உடலுக்கு அந்த மரியாதை கொடுக்காவிட்டால் குறையேதும் இல்லை.

अथ यद्यप्येनानुत्क्रान्तप्राणाञ्छूलेन समासं व्यतिषंदहेन्नैवैनं ब्रूयुः पितृहासीति न मातृहासीति न भ्रातृहासीति न स्वसृहासीति नाचार्यहासीति न ब्राह्मणहासीति ॥ ७.१५.३ ॥

**அத2 யத்3யப்யேநாநுத்க்ராந்தப்ராணாஞ்சூ2லேந ஸமாஸம் வ்யதிஷந்த3ஹேந்நைவைநம் ப்3ரூயு: பித்ரு’ஹாஸீதி ந மாத்ரு’ஹாஸீதி ந ப்4ராத்ரு’ஹாஸீதி ந ஸ்வஸ்ரு’ஹாஸீதி நாசார்யஹாஸீதி ந ப்3ராஹ்மணஹாஸீதி || 7.15.3||**

ஒருவர் இறந்த பிறகு, அவரது இறுதிச் சடங்கின் மீது, அவர்கள் கட்டைகளை அடுக்கி எறியூட்டி எரிக்கும்போது, அந்த உடலை ஒரு குச்சியால் குத்தி, உடலை நன்றாக வேகவைக்கும் போது, அவர்களின் உடலை ஏன் குத்துகின்றீர்கள் என்று கேட்கவும் மாட்டார்கள்.

நீங்கள் என் தந்தையைக் கொன்றீர்கள் என்று கூறவும் மாட்டார்கள். அல்லது *'என் தாயைக் கொன்றீர்கள்'* அல்லது *'என் சகோதரனைக் கொன்றீர்கள் '* அல்லது *'என் சகோதரியைக் கொன்றீர்கள் '* அல்லது *'என் ஆசிரியரைக் கொன்றீர்கள் '* அல்லது *'ஒரு பிராமணனைக் கொன்றீர்கள்'* என்று கேட்கவே மாட்டார்கள்.

प्राणो ह्येवैतानि सर्वाणि भवति स वा एष एवं पश्यन्नेवं मन्वान एवं विजानन्नतिवादी भवति तं चेद्ब्रूयुरतिवाद्यसीत्यतिवाद्यस्मीति ब्रूयान्नापह्नुवीत ॥ ७.१५.४ ॥

**ப்ராணோ ஹ்யேவைதாநி ஸர்வாணி ப4வதி ஸ வா ஏஷ ஏவம் பஸ்யந்நேவம் மந்வாந ஏவம் விஜாநந்நதிவாதீ3 ப4வதி தம் ந்சேத்3ப்3ரூயுரதிவாத்3யஸீத்யதிவாத்3யஸ்மீதி ப்3ரூயாந்நாபஹ்நுவீத || 7.15.4||**

பிராணனே அனைத்துக்கும் ஆதாரமாக இருப்பதினால், பார்த்தல், கேட்டல், பிறகு சிந்தித்தல் அதனால் நிச்சயம் செய்யப்படுவது என எல்லாமே பிராண சக்தியால் மட்டுமே சாத்தியமாகின்றது.

மேலும், பிராணன் இருப்பதினால் மட்டுமே அனைத்து அனாத்மா விஷயங்களை தாண்டி, ஆத்மா விஷயங்களை பேசுபவன் அதிவாதி (முமுக்ஷு) என்று அழைக்கப்படுவான்.

யாராவது அதிவாதியைப் பார்த்து, "**நீங்கள் உங்கள் நிலையிலிருந்து எங்கள் நிலைக்கு இறங்கி வந்து பேச வேண்டும்**", என்று கேட்டால், நான் கூறவருகின்ற உண்மையை என் நிலையிலிருந்துதான் பேசுவேன் என்று முமுக்ஷு தைரியமாக பதிலளிக்க வேண்டும்.

---

॥ इति षोडशः खण्डः ॥

**॥ இதி ஷோட$^3$ஸ: க$^2$ண்ட:$^3$ ॥**

**|| இது பதினாறாவது காண்டம் ||**

एष तु वा अतिवदति यः सत्येनातिवदति सोऽहं भगवः सत्येनातिवदानीति सत्यं त्वेव विजिज्ञासितव्यमिति सत्यं भगवो विजिज्ञास इति ॥ ७.१६.१ ॥

**ஏஷ து வா அதிவத$^3$தி ய: ஸத்யேநாதிவத$^3$தி ஸோऽஹம் ப$^4$க$^3$வ: ஸத்யேநாதிவதா$^3$நீதி ஸத்யம் த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யமிதி ஸத்யம் ப$^4$க$^3$வோ விஜிஜ்ஞாஸ இதி ॥ 7.16.1॥**

ஒருவருக்கு முமுக்ஷுத்வம் தீவிரமாகி விட்டால்தான் அது செயலுக்கு வருகிறது. எவ்வளவு கஷ்டம் வந்தாலும் பொறுத்துக் கொள்ளுதல், எவ்வளவு தடைகள் வந்தாலும் முயற்சி செய்து அதை நீக்கி முன்னேறுதல், இதற்காக தியாகங்களை செய்தல் போன்றவை அனைத்துமே அந்த பரபிரம்மத்தை அடைவதில் உள்ள தீவிரத்தை காட்டுகிறது.

யார் பிரம்மத்தை அறிந்து பேசுகிறாரோ அவரை அதிவாதி (முமுக்ஷு) என்று அழைப்பர். அவருக்கு பிரம்மத்தை அடைவதுதான் முடிவான இலட்சியமாக கொண்டிருக்க வேண்டும்.

நாரதர், ஐயா, '**நான் சத்தியத்தை அறிந்து அதிவாதியாக வேண்டும்**' என்றார்.

அதற்கு சனத்குமாரர், *'அப்படியானால், உண்மையை அறிய ஆர்வமாக ஆசைப்பட வேண்டும்'* என்றார்.

ஐயா.'**உண்மை அறியவேண்டும்**', என்றார் நாரதர்.

................................................................

॥ इति सप्तदशः खण्डः ॥

**|| இதி ஸப்தத³ஸ: க²ண்ட:³ ||**

**|| இது பதினேழாவது காண்டம் ||**

यदा वै विजानात्यथ सत्यं वदति नाविजानन्सत्यं वदति विजानन्नेव सत्यं वदति विज्ञानं त्वेव विजिज्ञासितव्यमिति विज्ञानं भगवो विजिज्ञास इति ॥ ७.१७.१ ॥

**யதா³ வை விஜாநாத்யத² ஸத்யம் வத³தி நாவிஜாநந்ஸத்யம் வத³தி விஜாநந்நேவ ஸத்யம் வத³தி விஜ்ஞாநம் த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யமிதி விஜ்ஞாநம் ப⁴க³வோ விஜிஜ்ஞாஸ இதி || 7.17.1||**

எதைக் காண வேண்டுமோ, அதைக் காண வேண்டும் - **ப்ரஹ்மம் சத்யம் ஞானம் அநந்தம்** ஆகும்.

ப்ரஹ்மத்தை அடைய என்ன செய்ய வேண்டும்?.

அதை, அறிவதற்கான அறிவு (விஜ்ஞானம்) வேண்டும்.

அத்தகைய விஞ்ஞானம் நமக்காகக் கொடுக்கப்பட்டுள்ள வேதசாஸ்திரத்தில் தான் உள்ளது. அதை சரியான ஸத் குருவின் மூலம் **சிரவணம்** என்பதாக உபதேசிக்கக் கேட்டு, அதைப்பற்றிய **மனனம்** என்பதாக சிந்தனை செய்து, அதன் உண்மைத் தன்மையை உணர வேண்டும்.

அதற்கு முதலில், ஸ்ரத்தை (நம்பிக்கை) தேவை. "**ஸ்ரத்தாவான் லபதே ஞானம்**" என்கின்றது கீதை. அதற்கு மனக் கட்டுப்பாடு அவசியம் தேவை.

ஆகவே, விஞ்ஞானத்தை அடைய முயற்சி செய்யவேண்டும். விஞ்ஞானம் என்பது பிரம்மத்தைப் பற்றிய அறிவாகும். அதை அறிந்தவனால் தான் சத்தியத்தைப் பற்றி பேச முடியும்.

இதை அடைவது எப்படி?

அதற்குரிய சாதனம் என்ன? என்று கேட்டால், விசாரம் மட்டும்தான் ஞானத்தை அடைய உதவும் சாதனம்.

ஏன் விசாரம் தேவை?

எதை, எப்பொழுது விசாரம் செய்ய வேண்டும்?

சத்குருவின் மூலம் உபதேசிக்கப்பட்ட விஞ்ஞான விஷயங்களை கேட்டு, அவ்வாறு கேட்டவற்றில், உள்ள சந்தேகங்களைப் பற்று அறிந்து, தெளிந்து, அதில் நிலையாக நிற்கக்கூடிய நிலைக்கு உயர வேண்டி, மனதை அதன் சம்பந்தப்பட்ட அறிவில் ஆழமாக ஈடுபடுத்த வேண்டும்.

ஆகவே, ஒருவர் '**ஆழ்ந்த அறிவைத் தேட வேண்டும்**' என்றார் சனத்குமாரர்.

அதற்கு நாரதர், ஐயா, '**நான் அந்த அறிவை ஆழமாகத் தேடுகிறேன்**' என்றார்.

................................................................

॥ इति अष्टादशः खण्डः ॥

**॥ இதி அஷ்டாத3ஸ: க2ண்ட:3 ॥**

**॥ இது பதினெட்டாவது காண்டம் ॥**

यदा वै मनुतेऽथ विजानाति नामत्वा विजानाति मत्वैव विजानाति मतिस्त्वेव विजिज्ञासितव्येति मतिं भगवो विजिज्ञास इति ॥ ७.१८.१ ॥

**யதா3 வை மநுதேऽத2 விஜாநாதி நாமத்வா விஜாநாதி மத்வைவ விஜாநாதி மதிஸ்த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யேதி மதிம் ப4க3வோ விஜிஜ்ஞாஸ இதி ॥ 7.18.1 ॥**

**விசாரத்தின் தேவை:** நான் சம்சாரியா, அசம்சாரியா என்று சந்தேகம் வந்தால் நம் அனுபவத்தின் அடிப்படையில் அறிந்து கொள்ளலாம்.

வேதம் ஜீவர்களை பூரணமானவர்கள், அழிவற்றவர்கள் என்று உரைக்கிறது. அதே வேதம் கர்ம காண்டத்தில் சம்சாரி என்ற பாவனையில் சில இடங்களில் போதிக்கிறது.

இதைத்தான் விசாரம் செய்தறிய வேண்டும்.

நான் என்னை யார்? என்று நினைக்கிறேன்.

நம் அனுபவம் நம்மை சம்சாரி என்று உணர்த்துகிறது. எனவே இரண்டு பிரமாணங்கள் இரண்டு விதமான அர்த்தத்தை கொடுக்கும்போது, இங்கு விசாரம் அவசியமாகிறது.

எதை விசாரம் செய்வது?

**வாத்யார்த்த விசாரம்:** வாக்கியத்தின் அர்த்தத்தை விசாரம் செய்தல்.

எந்த அடிப்படையில் சாஸ்திரம் உபதேசம் செய்கிறது என்று வேதாந்த வாக்கியத்தை விசாரம் செய்ய வேண்டும். விசாரம் செய்யாமல் ஒருவனுக்கு அறிவு கிடைக்காது.

புத்தியிலுள்ள தமஸானது அவ்வளவு எளிதாக விசாரம் செய்ய விடாது, அதுவே, புத்திக்கூர்மை உள்ளவனால்தான் விசாரம் செய்ய உதவும்.

ஆனால் அதை செயல்படுத்த மனதானது தமஸாக இருக்கக்கூடாது. அதாவது, தமோ குணத்தில் சிக்கிக் கொண்டிருக்கக் கூடாது.

சனத்குமாரர் கூறினார், *‘ஒருவன் நன்றாக, ஆழமாக மனதை விசாரித்து, சிந்திக்கக் கற்றுக் கொண்டால், அவனால், அவனிடம் உள்ள குற்றங் குறைகளை அறிய முடியும்’.*

அப்பொழுதுதான் தன்னிடம் உள்ள அறியாமைகளை அகற்றிக் கொள்ள முடியும். அது, ஆழமாக சிந்திக்காமல் அறிய முடியாது. ஆழ்ந்து சிந்திக்கும் போது மட்டும்தான் அவனது அறியாமைகள் அகன்று, அறிவு உறுதியாகத் தெரியும் என்றார்.

அதற்கு நாரதர், ஐயா, **‘எனக்கு விசாரம் செய்வதற்குத் தெரிய வேண்டும்’** என்றார்.

................................................................................

॥ इति एकोनविंशतितमः खण्डः ॥

**|| இதி ஏகோநவிம்ஸதிதம: க$^{2}$ண்ட:$^{3}$ ||**

**|| இது பத்தொன்பதாவது காண்டம் ||**

यदा वै श्रद्दधात्यथ मनुते नाश्रद्दधन्मनुते श्रद्दधदेव मनुते श्रद्धा त्वेव विजिज्ञासितव्येति श्रद्धां भगवो विजिज्ञास इति ॥ ७.१९.१ ॥

**யதா$^{3}$ வை ஸ்ரத்$^{3}$த$^{3}$தா$^{4}$த்யத$^{2}$ மநுதே நாஸ்ரத்$^{3}$த$^{3}$த$^{4}$ந்மநுதே ஸ்ரத்$^{3}$த$^{3}$த$^{4}$தே$^{3}$வ மநுதே ஸ்ரத்$^{3}$தா$^{4}$ த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யேதி ஸ்ரத்$^{3}$தா$^{4}$ம் ப$^{4}$க$^{3}$வோ விஜிஜ்ஞாஸ இதி || 7.19.1||**

விசாரம் செய்வதற்கு சாதனம் என்ன?

அதற்கு சிரத்தை (விசுவாசம்) என்கின்ற குணம் அவசியம் தேவை. அதாவது, எதை அறிய விரும்புகின்றானோ, அதை அவன் மதிக்க வேண்டும். அதற்கான நம்பிக்கை அவனிடத்தில் வேண்டும்.

இந்த நம்பிக்கை ஒன்று மட்டும்தான் பயனை அடைவதற்கு முன்பாக, அதைத் தரக்கூடிய செயலை செய்ய வைக்கும். அதுப்போலவே, ஞானம் வந்தவுடன் சிரத்தையின் அவசியம் முடிந்து விடுகிறது.

எனவே, முதலில் சிரத்தையுடன் இருக்க வேண்டும்.

எப்பொழுது ஒருவன் வேதாந்த விஷயங்களின் மீதும், குருவின் வார்த்தையின் மீதும் நம்பிக்கை (சிரத்தை) வைக்கும் போதுதான், அவனால் ஞானமடைய முடியும்.

அதனால், அத்தகைய ஞானத்தை அடைய ஆர்வம் காட்டுகின்ற சாதகன் மட்டுமே, எப்போதும் விசாரம் செய்து கொண்டிருப்பான்.

அதுவே, சிரத்தையில்லாதவன் விசாரத்தில் ஈடுபடமாட்டான். எனவே, சிரத்தைத்தான் நம்மால் முதலில் அடையப்பட வேண்டும்.

அதற்கு நாரதர், ஐயா, **‘எனக்கு இந்த ஸ்ரத்தை (நம்பிக்கை) வேண்டும்’** என்று பதிலளித்தார்.

■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■■

॥ इति विंशतितमः खण्डः ॥

**|| இதி விம்ஸதிதம: க2ண்ட:3 ||**

**|| இது இருபதாவது காண்டம் ||**

यदा वै निस्तिष्ठत्यथ श्रद्दधाति नानिस्तिष्ठञ्छ्रद्दधाति निस्तिष्ठन्नेव श्रद्दधाति निष्ठा त्वेव विजिज्ञासितव्येति निष्ठां भगवो विजिज्ञास इति ॥ ७.२०.१ ॥

**யதா3 வை நிஸ்திஷ்ட2த்யத2 ஸ்ரத்3த3தா4தி நாநிஸ்திஷ்ட2ஞ்ச்2ரத்3த3தா4தி நிஸ்திஷ்ட2ந்நேவ ஸ்ரத்3த3தா4தி நிஷ்டா2 த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யேதி நிஷ்டா2ம் ப4க3வோ விஜிஜ்ஞாஸ இதி || 7.20.1||**

இந்த சிரத்தையை வளர்த்துக்கொள்ள நிஷ்டா என்ற சாதனம் தேவை. நிஷ்டா என்றால் '**விசுவாசம்**' அல்லது சேவை என்று பொருள்.

பொதுவாக, குருவினிடம் விசுவாசம் தேவை. ஒருவரிடம் உண்மையான மரியாதையும் பக்தியும் இருக்கும்போது மட்டும்தான் அவரது வார்த்தைக்கு மரியாதை இருக்கும்.

அவ்வாறு, மரியதையுடன் கூடிய விசுவாசத்துடன் குருவுக்கு சேவை செய்யும் போதுதான் சிரத்தை வரும்.

அதாவது, ஆன்ம ஞானத்தை அடைந்தவரை நாடினால், அவ்வாறு நாடுகின்றவர்களுக்கு சிரத்தை தானாக வரும். அதற்குத்தான் பிரம்ம நிஷ்டை உள்ள குருவைத்தான் அவன் அடைய வேண்டும். அத்துடன், அந்த குரு ஸ்ரோத்ரனாகவும், பிரம்ம நிஷ்டனாகவும் இருக்க வேண்டும்.

அதாவது, **ஸ்தோத்ரன்** என்றால், வேத சாஸ்திரங்களை முழுமையாக கற்றறிந்து, அதை மற்றவர்களுக்கு உபதேசிக்கக் கூடியவராகவும் இருக்க வேண்டும். **பிரம்ம நிஷ்டன்** என்றால், பிரம்மத்தில் நிலைப்பெற்றவன்.

அதாவது, பிரம்ம நிஷ்டையில் மட்டுமே அமைதியாக இருந்துக் கொண்டு, யாருடனும் தொடர்பு கொள்ளாத குருவை நாடினால், சாஸ்திரத்தை கற்றுக் கொள்ள முடியாது.

ஆகவே, சாஸ்திரத்தை மற்றவர்களுக்கு எடுத்து உபதேசிக்கக்கூடிய நிலையிலுள்ள ஸ்தோத்ரன் என்ற தக்க ஸத்குருவை நாட வேண்டும்.

அப்படிப்பட்ட குருவின் அருகில், சாதகன் செல்ல, அவனது சேவை அல்லது விசுவாசம் (நிஷ்டா) உதவுகிறது.

இந்த சேவை அல்லது விசுவாசம் மூலம், அவனுக்கு பணிவு என்ற குணம் வந்து விடுகிறது. இதனால் மட்டுமே சாதகன் தன்னிடம் உள்ள விக்ஞானமய கோசத்திலிருந்து விடுபட முடியும்.

அத்தகைய சாதகன் எந்தவித பலனும் எதிர்ப்பார்க்காமல், அவரிடமும், மற்றவர்களிடமும் மனம் கோணாமல் உதவிகளைச் செய்ய வேண்டும். இப்படி செய்யும் போது சிரத்தை தானாகவே வந்து விடுகிறது.

அதுவே, அப்படி, சேவை செய்யாதவர்களுக்கு சிரத்தை வராது.

---

॥ इति एकविंशः खण्डः ॥

**॥ இதி ஏகவிம்ஸ: க$^{2}$ண்ட:$^{3}$ ॥**

**॥ இது இருபத்தியொன்றாவது காண்டம் ॥**

यदा वै करोत्यथ निस्तिष्ठति नाकृत्वा निस्तिष्ठति कृत्वैव निस्तिष्ठति
कृतिस्त्वेव विजिज्ञासितव्येति कृतिं भगवो विजिज्ञास इति ॥ ७.२१.१ ॥

**யதா$^{3}$ வை கரோத்யத$^{2}$ நிஸ்திஷ்ட$^{2}$தி நாக்ரு’த்வா நிஸ்திஷ்ட$^{2}$தி க்ரு’த்வைவ நிஸ்திஷ்ட$^{2}$தி க்ரு’திஸ்த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யேதி க்ரு’திம் ப$^{4}$க$^{3}$வோ விஜிஜ்ஞாஸ இதி ॥ 7.21.1॥**

ப்ரஹ்மம் **நிரதிசய ஸுக** ரூபம்.

அதாவது, ஆனந்தமயமான ப்ரஹ்மம் அறிவாக இருப்பதினால், அதனை அறிவதற்கான அறிவு (ஞானம்) அவசியம். அதை அறிந்தால் மட்டுமே, அள்ள அள்ள குறையாத ஆனந்தம் தானே வரும்.

அதற்கான அறிதலுக்கு ஆதாரமான சாஸ்திரத்தின் மீதும், சத்குருவின் மீதும் நம்பிக்கையுடன் கூடிய சேவை தேவைப்படுகின்றது. அத்துடன், சேவை செய்ய வேண்டும் என்ற எண்ணம் இருந்தால் மட்டும் போதாது,

அத்துடன், அந்த சாதகனுக்கு, **மனக்கட்டுப்பாடு, இந்திரியக்கட்டுப்பாடு** என இரண்டும் இருக்க வேண்டும்.

அதற்கு நாரதர், ஐயா, '**நான் மனம் மற்றும் இந்திரியக் கட்டுப்பாடுகளைப் பற்றி அறிய ஆவலாக உள்ளேன்**' என்றார்.

.................................................................................

॥ इति द्वाविंशः खण्डः ॥

**॥ இதி த்$^{3}$வாவிம்ஸ: க$^{2}$ண்ட:$^{3}$ ॥**

**|| இது இருபத்தியிரண்டாவது காண்டம் ||**

यदा वै सुखं लभतेऽथ करोति नासुखं लब्ध्वा करोति सुखमेव लब्ध्वा करोति सुखं त्वेव विजिज्ञासितव्यमिति सुखं भगवो विजिज्ञास इति ॥ ७.२२.१ ॥

**யதா$^{3}$ வை ஸுக$^{2}$ம் லப$^{4}$தேऽத$^{2}$ கரோதி நாஸுக$^{2}$ம் லப்$^{3}$த்$^{4}$வா கரோதி ஸுக$^{2}$மேவ லப்$^{3}$த்$^{4}$வா கரோதி ஸுக$^{2}$ம் த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்யமிதி ஸுக$^{2}$ம் ப$^{4}$க$^{3}$வோ விஜிஜ்ஞாஸ இதி ॥ 7.22.1॥**

ஒருவன் எந்தவிதமான காரியத்தில் ஈடுபட்டாலும், அதில் சுகம் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தினால் தான் அந்தக் காரியங்களில் ஈடுபடுவான்.

அதுப்போலவே, யோகியும் சுகத்தை நாடித்தான் ஒரு காரியத்தில் ஈடுபடுகிறான். அவ்வாறு சுகம் பெறுவதன் மூலம்தான் ஒருவன் தன் கடமையைச் செய்கிறான்.

ஆனால் அந்த சுகத்தின் (மகிழ்ச்சியின்) உண்மையான தன்மையை ஒருவர் புரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.

அது, ஒரு காரியத்தை செய்ய முற்படுகின்ற சாதகன் **மனக்கட்டுப்பாடு, இந்திரியக்கட்டுப்பாடு** போன்றவைகளினால் முயற்சிக்கும்போது மட்டும்தான், அவன் சாதரணமாக அடையும் சுகத்தைவிட, நூறு மடங்கு உயர்ந்த சுகத்தை கொடுக்கக்கூடிய அந்த அறிவை நெருங்க முடியும். அப்படி அந்த அறிவை அடைந்தவனுக்கு உண்டாகும் மகிழ்ச்சி என்பது, மற்ற புறப் பொருட்களினால் உண்டாகும் மகிழ்ச்சியை விட மிகவும் உயர்ந்தது.

எனவே, இந்த வகையான மகிழ்ச்சியைத்தான் மனிதன் நாட வேண்டும்.

அதற்கு நாரதர், ஐயா, **'மகிழ்ச்சியின் உண்மையான தன்மையை நான் நன்கு அறிய விரும்புகிறேன்'** என்றார்.

.................................................................

॥ इति त्रयोविंशः खण्डः ॥

**॥ இதி த்ரயோவிம்ஸ: க²ண்ட:³ ॥**

**॥ இது இருபத்திமூன்றாவது காண்டம் ॥**

यो वै भूमा तत्सुखं नाल्पे सुखमस्ति भूमैव सुखं भूमा त्वेव विजिज्ञासितव्य इति भूमानं भगवो विजिज्ञास इति ॥ ७.२३.१ ॥

**யோ வை பூ⁴மா தத்ஸுக²ம் நால்பே ஸுக²மஸ்தி பூ⁴மைவ ஸுக²ம்**
**பூ⁴மா த்வேவ விஜிஜ்ஞாஸிதவ்ய இதி பூ⁴மாநம் ப⁴க³வோ விஜிஜ்ஞாஸ இதி**
**॥ 7.23.1॥**

**பூமா, மஹத்** - பரபிரம்மம்,

**நிரதிஷயம்** - முழுமையானது,

**பூர்ணம்** - முழுமை நிறைந்தது.

எது **பூமாவோ** அதுதான் **சுகம்**.

பொதுவாக, சுகம் இரண்டு வகையாக உள்ளது.

ஒன்று **ஆபாஸ சுகம்**, மற்றொன்று **சுபாவ சுகம்** ஆகும்.

அதாவது, இனிப்பில் உள்ள சுகம் அதன் சுபாவ சுகம். அதுவே, அந்த இனிப்பை காப்பில் கலந்து சாப்பிடும் போது வருகின்ற சுகம் ஆபாஸ சுகம் எனலாம்.

அதாவது, சுபாவ சுகம் இயற்கையானது. ஆனால், ஆபாஸ சுகம் உண்டாக்கப்படுக்வது. ஆக, நாம் அனுபவிக்கும் சுகமானது, அனுபவிக்கும் விஷயத்தினுடைய உண்மையான சுபாவம் அல்ல.

அதாவது, அல்பமான அனைத்து விஷயங்களில் அனுபவிக்கும் சுகம் என்பது ஆபாஸ சுகம்.

உண்மையில் அந்த ஆபாஸ சுகமானது திருப்தியைக் கொடுக்காமல், அதைவிட மேலான சுகத்தை அடைய வேண்டும் என்ற ஆசையை தூண்டி விடுகிறது.

அது, ஒரு தற்காலிகமாக வந்து போகின்ற சுகம். எனவே, இதையெல்லாம் தவிர்த்து பூமாவைத்தான் நாட வேண்டும் அதுதான் சுகத்தின் இருப்பிடம்.

பூமாவை அடைந்தால் நீ எல்லையற்ற சுகத்தை அடைவாய்.

அதுவே, நாம் அடைய வேண்டியது, நிலையான சுகமாகிய சுபாவ சுகம் அதுவே ஆகும்.

அதாவது, அனாத்மாவில் சுபாவ சுகம் இருக்கிறதென்றால் அதை எல்லோருக்கும் சுக புத்தியை உண்டு செய்ய வேண்டும். ஆனால் உண்மையில் அப்படி இல்லையே.

எனவே, அதில் தெரியும் சுகம் என்பது ஒரு தோற்றமே. அதாவது, சிலருக்கு சுகம் தரும் விஷயமே மற்றவருக்கு துக்கத்தைத் தரும்.

**உதாரணம்:-** அதாவது, சர்க்கரை என்ற இனிப்பு எல்லோருக்கும் சுகத்தைத்தான் தரும். ஆனால், அதுவே, சர்க்கரை நோய் வந்தவர்களுக்கு, சுகம் தருவதற்குப் பதிலாக துயரத்தை அல்லவா தருகின்றது.

**(ந அல்பே ஸுகம் அஸ்தி)**

எனவே, உண்மையான எல்லையற்ற சுகமாகிய அந்த **பூமா** - வை அறிந்துக் கொள்ள வேண்டும்.

அதற்கு நாரதர், ஐயா, '**நான் எல்லையற்ற அந்த பூமாவைப் பற்றி அறிந்துக் கொள்ள ஆர்வமாக உள்ளேன்**' என்றார்.

---

॥ इति चतुर्विंशः खण्डः ॥

**|| இதி சதுர்விம்ஸ: க$^{2}$ண்ட:$^{3}$ ||**

**|| இது இருபத்திநான்காவது காண்டம் ||**

यत्र नान्यत्पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति स भूमाथ यत्रान्यत्पश्यत्यन्यच्छृणोत्यन्यद्विजानाति तदल्पं यो वै भूमा तदमृतमथ यदल्पं तन्मर्त्यं स भगवः कस्मिन्प्रतिष्ठित इति स्वे महिम्नि यदि वा न महिम्नीति ॥ ७.२४.१ ॥

**யத்ர நாந்யத்பஸ்யதி நாந்யச்ச்$^{2}$ரு'ணோதி நாந்யத்$^{3}$விஜாநாதி ஸ பூ$^{4}$மாத$^{2}$ யத்ராந்யத்பஸ்யத்யந்யச்ச்$^{2}$ரு'ணோத்யந்யத்$^{3}$விஜாநாதி தத$^{3}$ல்பம் யோ வை பூ$^{4}$மா தத$^{3}$ம்ரு'தமத$^{2}$ யத$^{3}$ல்பம் தந்மர்த்யம் ஸ ப$^{4}$க$^{3}$வ: கஸ்மிந்ப்ரதிஷ்டி$^{2}$த இதி ஸ்வே மஹிம்நி யதி$^{3}$ வா ந மஹிம்நீதி || 7.24.1||**

நான் என்ற சொல்லில் ஆத்மாவும், அனாத்மாவும் சேர்ந்து குறிக்கிறது.

இங்கே அனாத்மாவை மட்டும் நீக்கி விட்டால், ஆத்மா தானாகவே புரிந்துவிடும்.

ஆத்மாவைப் பற்றி அனுபவம் இருக்கிறது. ஆனால் அறிவில்லை.

**யத்ர** - எதனிடத்தில்;

**அன்யத்** - வேறொன்றை;

**ந பஷ்யதி** - பார்க்கவில்லையோ;

அதாவது, எதனிடத்தில் வேறொன்றை பார்க்கவில்லையோ, அதுவே பூமாவாகும்.

அதேமாதிரி வேறொன்றை அறிவதில்லையோ.

**யத்ர நான்ய பஷ்யதி, நான்ய விஜானாதி, நான்ய ஸ்னோதி, தத்ர பூமா.**

- நாம ரூபங்களை நிஷேதம் செய்யப்படுகிறது.
- எல்லா இந்திரியங்களின் விஷயங்களையும் நிஷேதம் செய்யப்படுகிறது.
- பூமா என்பது தெரிவதில்லை, உணரப்பட வேண்டியது.
- அறிபவனொருவன் (சிதாபாஸன்) இந்திரியங்களை பயன்படுத்தி விஷயங்களை அறிந்துக் கொண்டிருக்கிறான்.
- சிதாபாஸன், அந்தக்கரணம், பிரபஞ்சம் இவையெல்லாம் எதில் ஒடுங்குகிறதோ அதுவே சைதன்யம்.
- பார்ப்பவன் பார்க்கும் பொருள், பார்க்க உதவும் கருவி இவையெல்லாம் நீக்கி விட்டால், பிறகு உணரப்படுவது பரப்பிரம்மம் மட்டுமே.
- எது காட்சி மாதிரி தோன்றிக்கொண்டிருக்கிறதோ அதைத்தான் நீக்க முடியும்.
- பூமாவில் ஒருவன் எதைக்கொண்டும் அதையும் அறிவதில்லை.

**பிரம்ம லக்ஷணங்கள்:-**

1. **பிரம்ம ஸ்வரூபம்** - விவகாரத்திற்குள் வருவதில்லை.

நாம் அனுபவிக்கின்ற பிரபஞ்சம்தான் மித்யா, இதுதான் விவகாரத்திற்கு வருகிறது. இது, ஞான விவகாரம், கர்ம விவகாரம் என இருவகையாக பிரிக்கப்படுகிறது.

2. நிர்விகல்பம் - பேதமற்றது - பிரம்மத்தில் பேதமற்றது.

3. விகல்பம் - பேதம்

a. ஞான விவகாரத்திற்கு தேவையான விகல்பம்.

அறிபவன் (பிரமாதா), பிரமானம் (கருவி), பிரமேயம் (அறியப்படும் பொருள்) இந்த மூன்றும் இருந்தால்தான் ஞானம் ஏற்படும்.

b. கர்ம விவகாரத்திற்கு தேவையான விகல்பம்.

கர்த்தா, கரணம் கர்ம (பொருள்).

**காரக பேதங்கள்:** கர்ம விவகாரத்தில் இருக்கும் பேதங்கள் நிர்விகல்பம் என்றால் ஞானபேதமும் இல்லாதது, கர்மபேதமும் இல்லாதது.

நிர்விகல்ப விசாரம் ஆழ்ந்த தூக்கத்திலும், மயக்கமடைந்த நிலையிலும் யோகிகளின் சமாதி நிலை.

அதிலே, வேறொன்றையும் பார்ப்பதில்லை அறிவதுமில்லை.

இது பிரம்ம லட்சணைக்கு பொருந்தி இருந்தாலும், இது அநித்யமாக இருப்பதாலும், காலவரையறைக்கு உட்பட்டதாலும் இது பிரம்ம லக்ஷணையில் சேராது.

அவஸ்தை (காலவரையறைக்குட்பட்ட அனுபவம்) என்பது வேறொரு அவஸ்தையால் நீக்கப்படும்.

ஆனால், ஸ்வரூபம் என்பது நிலையானது, நித்தியமானது. இதுவே **பூமா** என்றழைக்கப்படுகிறது.

சவிகல்ப அவஸ்தை, நிர்விகல்ப அவஸ்தை என்ற இந்த இரு அவஸ்தைகளுக்கும் இடையே, நிலையாக இருப்பது, நிர்விகல்பமாக இருப்பது **பூமா** என்ற பிரம்மம்.

இப்படி நிர்விகல்ப ஸ்வரூபமாக இருப்பது, "**நான்**" என்று தன்னை உணர்ந்து விட்டால், பிரம்மஞானியாகி விடுவோம்.

நிர்விகல்ப அவஸ்தை ஒரு லட்சியமில்லை, அது சாத்தியமுமில்லை. அது, சம்சாரத்திலிருந்து தற்காலிகமாக ஓய்வில் இருக்கிற நிலை, திரும்பவும் சம்சாரத்திற்கு வந்து விடும்.

ஆகவே, இது ஒரு சாதனையுமில்லை, சாத்தியமுமில்லை.

சவிகல்ப அவஸ்தைதான், நிர்விகல்ப ஸ்வரூபத்தை அடைவதற்கு சாதனையாகும்.

*[**சவிகல்ப சமாதி** (सविकल्पसमाधि) என்பது, அறிபவன், அறிவு என்னும் வேறுபாடுகள் மறையாமலே, இரண்டற்ற பிரம்மத்தின் வடிவை அடைந்த மனதின் ஒருமைபாடு சமாதி நிலையே **சவிகல்ப சமாதி** என்பார் பதஞ்சலி முனிவர்.

அதிலே, விகல்பம் எனில் பகுத்துக் காணும் கற்பனையாகும். சவிகல்ப சமாதியில், சித்தமானது (அறிவானது) அறிபவனான தன்னுடைய மற்றும் அறிவினுடைய எண்ணங்களுடனயே இரண்டற்ற பிரம்ம வஸ்துவின் மீது நிலைத்து நிற்கும்.

பிரம்ம வஸ்துதான் முதன்மையானதாகும்.

அறிந்து கொள்ளும் அறிவானது குறைந்து இருக்கும்.

அதனால், தற்காலிகமாக அந்த இரண்டும் மறக்கப்பட்டதைப் போல இருக்கும். ஆனால் உண்மையிலேயே ஒடுங்கி இருப்பதில்லை. இந்த சவிகல்ப சமாதியை **சம்ப்ரஜ்ஞாத சமாதி** என்றும் அழைப்பதுண்டு.

சவிகல்ப சமாதி நிலையில், மரத்தினால் செய்யப்பட்ட யானை போன்றவை (பொம்மை யானை) தோன்றிக் கொண்டிருந்தாலும், அத்துடன் மரமும் கூடவே சேர்ந்து தோன்றிக் கொண்டிருப்பதைப் போல, பன்மையான

இவ்வுலகமானது (துவைத பிரபஞ்சம்) தோன்றிக் கொண்டிருந்தாலும், **இரண்டற்ற அத்வைத பிரம்ம வஸ்துவும்** உணரப்படுகிறது.

மரத்தினால் செய்யப்பட்டுள்ள யானையைக் காணும்பொழுது, அறிவுடைய எவருமே அதையே உண்மையான யானை என்று எண்ண மாட்டார்கள்.

அது, யானை என்னும் பெயர் மற்றும் யானை என்னும் விலங்கின் உருவமானது அதற்கு இருந்தாலும், இந்தப் பெயரும், உருவமும் வெறும் பேச்சளவு மட்டுமே ஆகும்.

அது உண்மையிலேயே, **மரம்** என்பதை உணர்ந்து கொள்ள இயலுகிறது.

அதுப்போன்றே, பெயரையும், வடிவத்தையும், பெற்றுள்ள **பரம்** இந்த உலகமாக இருப்பினும், அறிபவன், அறிவு, அறியப்பட்ட வஸ்து (பிரம்மம்) என்னும் மூன்றும் காணப்பட்டாலும், அத்துடனேயே பிரம்ம வஸ்துவின் அனுபவமும் (பிரம்மானுபவம்) கூட, இந்த சவிகல்ப சமாதியில் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும்.]*

அதாவது, சில பொருட்கள் நம்முடைய அனுபவத்தில் இருந்தாலும், அறிவில்லையென்றால் அதையறிய முடியாது.

உதாரணமாக, பத்தாவது மனிதனை தேடும் ஒருவன், தன்னை விட்டு விட்டு, மற்ற ஒன்பது பேர்களை எண்ணி, பத்தாவது மனிதன் தொலைந்து விட்டான் என்று கவலைப்படும்போது, வேறொருவன் அவனை பார்த்து நீதான் அந்த பத்தாவது மனிதன் என்று கூறியவுடன் அவன் தன்னை உணர்ந்து கொண்டதுப்போல,. ஜாக்ரதா அவஸ்தையில் (விழிப்பு நிலையில்) இருந்துதான் ஞானத்தை அடைய வேண்டும்.*

சவிகல்ப அவஸ்தையில் அடைந்த, இந்த ஞானம் **நிர்விகல்ப ஸ்வரூபம்** (சாத்தியம்) இதை நிச்சயம் செய்பவர்தான் முமுக்ஷு.

**கர்ம கர்த்துரு தோஷம்:** அறிபவனும், அறியப்படும் பொருளும் எப்போதும் நடக்காது. உதாரணமாக, ஒரு திரைப்படம் வெள்ளைத் திரையில் ஓடிக்கொண்டிருக்கின்றது. அப்படி அதிலே, படம் ஓடிக்கொண்டிருந்தாலும், படம் ஓடாமல் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தாலும், அந்த திரை அப்படியேதான் இருக்கும்.

அதுப்போல, எவன் ஒன்றை பார்க்கிறானோ, கேட்கிறானோ, அறிகிறானோ அது **அனாத்மா, மாயை,** சவிகல்ப நிலை என்பதை உணர வேண்டும்.

**காரணம் - 1** பூமாவை அம்ருதம் என்று சொல்வதால் அது நித்யமானது.

**காரணம் - 2** சவிகல்ப அவஸ்தை நிகழ்காலத்தில் அனுபவிப்பது.

அதுப்போல, பூமாவும் இருந்துக் கொண்டிருக்கும்.

உதாரணமாக, கயிற்றில் பாம்பு பார்ப்பது போல, இரண்டும் ஒரே காலத்தில் நிகழ்வது.

வேறொன்றில்லை, பார்க்கவில்லை, கேட்கவில்லை, அறியவில்லை என்ற வார்த்தைகள் அதை மட்டும் பார்க்கிறோம் என்று பொருள் கொள்ளலாம்.

அதுப்போல, வேறொன்று இருக்கிறது. ஆனால், இப்பொழுது அது தெரியவில்லை என்றும் பொருள் கொள்ளலாம். இதிலிருந்து பார்ப்பவன், கேட்பவன் என்ற த்வைதம் தெரிகிறது.

1. கர்ம கர்த்திரு தோஷத்தின்படி பார்ப்பவனும், பார்க்கப்படும் பொருளும் எப்பொழுதும் ஒன்றாக இருக்காது.

2. அதாவது அறியாமையில் அடிப்படையிலே இதுப்போன்று கூறப்பட்டுள்ளது. ஆக, பிரம்மத்தில் ஏற்றி வைக்கப்பட்ட விஷயங்களை நீக்குகிறோம்.

அறியாமை இருக்கும்வரை த்வைதம் தெரிந்து கொண்டேயிருக்கும். அக்ஞானம் இருக்கும் வரை இந்த உலகம் தெரிந்து கொண்டேயிருக்கும். ஞானம் வந்தபின் கயிற்றில் தோன்றிய பாம்பு மறைவதைப்போல மறைந்து விடும்.

**ஸ்ருஷ்டி** - நாமரூப வெளிப்பாடு.
**பிரளயம்** - நாமரூப ஒடுங்குதல்.
**நிஷேதம்** - நாமரூபம் ஒன்றுமில்லை என்று நீக்குவது.
**விஜானாதி** - மனம் கிரகிக்கக்கூடிய விஷயங்கள், அனுபவமாக ஏற்படுதல்.

மனதினால் அடையமுடியாது என்றால், ஒரு பொருளாக அடைய முடியாது. மனதினால் அறிவது என்றால், சவிகல்ப அவஸ்தையை சாதனமாக கொண்டு அறிவது.

கனவில் பார்க்கும் விஷயங்கள், பொருட்கள் எல்லாம் அனுபவிக்கும் விஷயங்கள்யாவும் நான்தான். கனவு முடிந்ததும் எல்லாம் மறைந்து விடுகிறது. ஆனால், நான் மட்டும் இருக்கிறேன்.

அதாவது, கானல் நீரை பற்றிய அறிவு வந்ததும், அதைப்பார்த்தாலும் அதை அனுபவிக்க கூடியதல்ல என்று உதாசீனபடுத்துகிறோம்.

ஆகவே, த்வைதம் நீக்கம் என்பது சம்சாரம் அழிவதைக் குறிக்கிறது, மோட்சத்தை அடைவதை காட்டுகிறது. எது அல்பமோ, அது அழிவடையக் கூடியது.

ஆனால், பூமாவோ நித்யமானது.

**நாரதர்:** அந்த பூமா எதில் இருக்கிறது? எது தாங்கிக்கொண்டிருக்கிறது?

எதை சார்ந்திருக்கிறது? அதற்கு எது அதிஷ்டானமாக இருக்கிறது?

**சனத்குமாரர்:** இதற்கு ஆதாரம் எதுவும் கிடையாது. அதன் சக்தியிலே அது இருக்கின்றது.

**நாரதர்:** அது எப்படி ஒரு பொருளுக்கு ஆதாரமாக அதுவாகவே இருக்க முடியும்?

**சனத்குமாரர்:** அதற்கு ஆதாரமாக எதுவும் இல்லை.

அதாவது, ஒரு புத்தகம் இருக்கிறது, அதை கிழித்து விட்டால் புத்தகம் போய் விடுகிறது. பிறகு அதை குப்பை என்று அழைக்கப்படுகிறது. அதுவே, அதை எரித்து விட்டால் குப்பை என்ற நாமரூபம் போய் சாம்பல் என்றாகிறது.

இங்கு இருத்தல் எல்லா நிலையிலும் இருக்கிறது. எனவே, இருத்தல் என்பது சுதந்திரமாக இருக்கிறது எதையும் சார்ந்து இல்லை என்று தெளிவாகிறது.

பூமா என்பது அத்வைதம் என்று நிலைநாட்டப்பட்டது.

இனி அதை எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். ஒருவனுடைய புகழும் பெருமையும் பணத்தால் அல்லது இருக்கும் பதவியால் வந்தவையாக இருக்கும். இதிலிருந்து ஒருவன் எதையாவது ஒன்றை சார்ந்துதான் இருக்கிறான்.

**சனத்குமாரர் கூறினார்:** பூமா [எல்லையற்றது] அதில் ஒருவன் வேறெதையும் காணவில்லை, வேறு எதையும் கேட்கவில்லை, வேறு எதையும் அறியவில்லை [அதாவது, கண்டுபிடிக்கவில்லை].

ஆனால், கணிப்பு என்பது வேறு ஒன்றைப் பார்ப்பது, வேறு எதையாவது கேட்பது மற்றும் வேறு ஒன்றை அறிவது. எல்லையற்றது அழியாதது.

நாரதர் கேட்டார், '**ஐயா, பூமா எதில் தங்கியிருக்கிறார்**?'

அதற்கு சனத்குமாரர், '**அது அதன் சொந்த சக்தியில் தங்கியிருக்கிறது**'. அது, வேறு எதையும் சாராதது.

गोअश्वमिह महिमेत्याचक्षते हस्तिहिरण्यं दासभार्यं क्षेत्राण्यायतनानीति नाहमेवं ब्रवीमि ब्रवीमीति होवाचान्योह्यन्यस्मिन्प्रतिष्ठित इति ॥ ७.२४.२ ॥

**கோ³அஸ்வமிஹ மஹிமேத்யாசக்ஷதே ஹஸ்திஹிரண்யம் தா³ஸபா⁴ர்யம் க்ஷேத்ராண்யாயதநாநீதி நாஹமேவம் ப்³ரவீமி ப்³ரவீமீதி ஹோவாசாந்யோஹ்யந்யஸ்மிந்ப்ரதிஷ்டி²த இதி ॥ 7.24.2॥**

இவ்வுலகில் கால்நடைகள், குதிரைகள், யானைகள், பொன்கள், வேலைக்காரர்கள், மனைவிகள், விவசாய நிலங்கள் மற்றும் வீடுகள் ஆகியவை மனிதனின் பெருமைகள் என்று கூறப்படுகிறது.

நான் இந்த வகையான மகிமையைக் குறிக்கவில்லை, ஏனென்றால், இவைகள் ஒன்றுக்கொன்று சுயாதீனமானவை அல்ல.

நான் பேசுவது இதுதான் - **பூமா.**

---

॥ इति पञ्चविंशः खण्डः ॥

**|| இதி பஞ்சவிம்ஸ: க2ண்ட:3 ||**

**|| இது இருபத்தைந்தாவது காண்டம் ||**

स एवाधस्तात्स उपरिष्टात्स पश्चात्स पुरस्तात्स दक्षिणतः स उत्तरतः स एवेदं सर्वमित्यथातोऽहंकारादेश एवाहमेवाधस्तादहमुपरिष्टादहं पश्चादहं पुरस्तादहं दक्षिणतोऽहमुत्तरतोऽहमेवेदं सर्वमिति ॥ ७.२५.१ ॥

**ஸ ஏவாத4ஸ்தாத்ஸ உபரிஷ்டாத்ஸ பஸ்சாத்ஸ புரஸ்தாத்ஸ த3க்ஷிணத: ஸ உத்தரத: ஸ ஏவேத3ம் ஸர்வமித்யதா2தோ஽ஹங்காராதே3ஸ ஏவாஹமேவாத4ஸ்தாத3ஹமுபரிஷ்டாத3ஹம் பஸ்சாத3ஹம் புரஸ்தாத3ஹம் த3க்ஷிணதோ஽ஹமுத்தரதோ஽ஹமேவேத3ம் ஸர்வமிதி || 7.25.1||**

பரபிரம்ம லக்ஷணம் / பிரயோஜனம் ஒரு பொருள் பூரணமாக உள்ளது என்று உறுதி செய்ய வேண்டுமென்றால், அதற்கு இணையாக வேறொன்று இருக்கக் கூடாது.

பூமாவுக்கு வேறுபட்டதாக இரண்டு தத்துவங்கள் தோன்றிக் கொண்டிருக்கிறது. ஜகத்தும், ஜீவனும் வேறாக (விலக்ஷணம்) இருப்பதாக நினைக்கிறோம்.

ஜகத்தானது ஜடமாக பூமாவுக்கு வேறாக தோன்றுகிறது. ஜீவன் அறிவு ஸ்வரூபம் இது பூமா போன்றதாக உள்ளது. இது இரண்டும் இல்லையென்று நிரூபிக்க வேண்டும்.

இந்த இரண்டையும், காரிய காரண தத்துவத்தை பயன்படுத்தி நீக்கப்படும்.

ஜீவனிடத்திலுள்ள மூன்று சரீரங்களையும், அந்த ஜகத்துடன் சேர்த்து விட்டு அறிவையும், பிரம்ம ஸ்வரூபத்துடன் ஐக்கியப்படுத்திட வேண்டும்.

ஜகத்தை நிஷேதம் செய்யும் இரண்டாவது உபாயம் ஒரு சொற்றொடரில் உள்ள எல்லா சொற்களும் பொருளை குறிக்கிறது. வாக்யம் எப்பொழுதும் த்வைதத்தை போதிக்கிறது. ஆனால் சில வாக்கியங்கள் ஒரே பொருளை மட்டும் குறிக்கலாம்.

(உ-ம்) தயாள குணமுள்ள, தசரத புதல்வன், மனித அவதாரம், தர்மத்தை ரக்ஷிக்கும் ராமபிரான். இந்த வாக்கியத்தில் உள்ள எல்லா சொற்களும் ஒரே பொருளான ராமரை மட்டும் குறிக்கிறது. இதற்கு சாமான அதிகரணம் என்று பெயர்.

எனவே ஒரு வாக்கியம் சாமானதிகரண்யமாக இருப்பதால் அது இருமையைக் குறிக்காது.

ஐக்கிய சாமானாதி கரணம் - ஒரு சொல்லிலுள்ள இரண்டு சொற்களை ஐக்கியப்படுத்தி ஒன்றை சமானப்படுத்துதல்.

உதாரணமாக, **நீ அதுவாகவே இருக்கிறாய்** எனும்போது, மொட்டையுடன் இப்போது காட்சியளிக்கும் இவர், இதற்கு முன்பு தாடி மீசையுடன் இருந்தார். ஆக, அவரும், இவரும் ஒன்றே.

பாதாய சாமானாதி கரணம் - தூணில் தெரிந்த திருடன் என்ற வாக்கியத்தில், திருடன் என்ற சொல்லின் பொருள் நீங்கி தூண் மட்டும் நான் இருக்கிறேன் என்பதைக்காட்டுகிறது.

அதுப்போல, ஜகத்தானது பிரம்மம்தான், என்ற சொற்றொடரில் ஜகத்தானது நீக்கப்பட்டு பிரம்மத்திடம் மட்டும் பொருள் கொள்கிறது.

அதிகரணம்: ஒரு சொல் எந்தப்பொருளை குறிக்கிறதோ அதற்கு அதிகரணம் என்று பெயர்..

(உ-ம்) புத்தகம் - இந்தச்சொல் புத்தகத்தை மட்டும் குறிக்கிறது.

**சாமானாதிகரணம்:** ஒரு சொற்றொடரில் உள்ள எல்லாச் சொற்களும் அதற்குரிய அதிகரணத்தை குறிப்பதால் இது இவ்வாறு அழைக்கப்படுகிறது.

மரத்தினால் செய்யப்பட்ட யானை பொம்மையில், அதன் உருவத்தை பார்க்கும்போது மரம் மறைந்து விடுகிறது. மரத்தை பார்க்கும்போது யானை உருவம் மறைந்துவிடும். அதேபோல பிரம்மத்தின்மீது ஏற்றி வைக்கப்பட்ட ஜகத்தை நீக்கி பிரம்மத்தை மட்டும் பார்க்க வேண்டும்.

அதுவே, இவையனைத்துமாக இருக்கிறது.

**अहं एव इदं सर्वं -** அஹம் ஏவ இதம் சர்வம்.

நானே இவையனைத்துமாக இருக்கிறேன் என்று புரிந்துக் கொள்ள வேண்டும்.

இங்கே நான் என்பது ஆத்மாவை குறிக்கிறது.

**आत्माएव इदं सर्वं -** ஆத்மா ஏவ இதம் சர்வம்.

ஆத்மா மட்டும்தான் எங்கும் வியாபித்திருக்கிறது.

ஆத்மாவிடமிருந்து வேறுபடாத விஷயம்தான் நான் (अहं).

பார்க்கிறதெல்லாம் நான்தான் "**அது**" என்பதை "**நான்**" என்று அழைக்கக்காரணம் அனாத்மாவை, ஆத்மாவோடு சேர்த்துப்பார்ப்பதால்தான்.

இங்கு அனாத்மாவை நீக்கி ஆத்மாவை நான்தான் என்று உணர வேண்டும். நான் என்பதை அழித்துவிட வேண்டும் என்று யாரும் விரும்ப மாட்டார்கள். இவ்வாறு பிரம்மமே நான் என்று அறிந்தவுடன் அதன் உண்மை ஸ்வரூபத்தை அடைகிறோம்.

இதுவே மோட்சத்தை அடைதல் என்று கூறுகிறோம்.

எந்த ஜீவன் இவ்விதமாக அறிகிறானோ (சிரவணம்), இவ்விதமாக சிந்திக்கின்றானோ (மனனம்), பிறகு அந்தச் சிந்தனையில் நிலைபெற முயற்சி

செய்து கொண்டு இருக்கிறார்கனோ (நிதித்யாஸனம்), அவன் இந்த மாதிரியான பலனை அடைகிறான்.

இதுதான் ஜீவன்முக்தி நிலை.

நம் ஆனந்தத்திற்கு வெளியே உள்ள பொருட்களை நாடுதல், நமக்கு நாமே சில நிபந்தனைகளை போட்டுக்கொண்டு, அதன் அடிப்படையில் இன்பத்தை நாடுகிறோம், தேடுகிறோம்.

**ஆத்ம மிதுனஹ** - தன் ஆனந்தத்தை, பற்றை தேடுதல்.
**ஆத்மானந்தஹ** - ஆனந்தம் தன்னிடத்திலேதான்.
**ஸ்வராட்** - தனக்குத்தானே ராஜாவாக இருக்கிறான்.

ஜீவன் முக்தன் மீதமுள்ள வாழ்நாள் முழுவதும் இப்படியே இருக்கிறான். உயிர் வாழ்வதற்கு பிறவற்றை சார்ந்திருக்க வேண்டும். அதாவது அன்னம், நீர், வாயு போன்றவற்றின் உதவி தேவைப்படுகிறது.

ஆனால், தன்னிடத்தில் ஆனந்தமாக இருப்பதற்கு எதையும் சார்ந்திருக்க வேண்டிய அவசியமில்லை. எல்லா உலகத்திலும் தன் விருப்பப்படி வாழலாம். எந்தவிதமான கட்டுப்பாடும் இல்லை. உலகத்திலுள்ள எல்லா பொருட்களின் மீது ஆசையில்லாமன் இருக்கிறான். அவனே பூமா.

**அக்ஞானியின் நிலை:** யார் இந்த அறிவை அடையாமல் இருக்கிறார்களோ அவர்கள் மற்றவர்களை சார்ந்திருக்கிறார்கள்.

இவர்கள் அழியக்கூடிய உலகத்தில் அழியக்கூடிய உடலைப்பெற்று வாழ்வார்கள். இவர்கள் எல்லா உலகத்திலும் மற்றவர்களுக்கு கட்டுப்பட்டு இருப்பார்கள். அதாவது ஆசைவசப்பட்டு துன்பத்தில் உழன்று கொண்டிருப்பார்கள்.

அந்த பூமா கீழே; அது மேலே உள்ளது; அது பின்னால் உள்ளது; அது முன்னால் உள்ளது; அது வலதுபுறம் உள்ளது; அது இடதுபுறம் உள்ளது. இதெல்லாம் பூமா.

இப்போது, ஒருவரின் சொந்த அடையாளத்தைப் பொறுத்தவரை: நான் கீழே இருக்கிறேன்; நான் மேலே இருக்கிறேன்; நான் பின்னால் இருக்கிறேன்; நான் முன்னால் இருக்கிறேன்; நான் வலதுபுறம்; நான் இடதுபுறம் இருக்கிறேன். நானே இதல்லாம்.

अथात आत्मादेश एवात्मैवाधस्तादात्मोपरिष्टादात्मा पश्चादात्मा पुरस्तादात्मा दक्षिणत आत्मोत्तरत आत्मैवेदं सर्वमिति स वा एष एवं पश्यन्नेवं मन्वान एवं विजानन्नात्मरतिरात्मक्रीड आत्ममिथुन आत्मानन्दः स स्वराड्भवति तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति अथ येऽन्यथातो विदुरन्यराजानस्ते क्षय्यलोका भवन्ति तेषां सर्वेषु लोकेष्वकामचारो भवति ॥ ७.२५.२ ॥

**அதா$^{2}$த ஆத்மாதே$^{3}$ஸ ஏவாத்மைவாத$^{4}$ஸ்தாதா$^{3}$த்மோபரிஷ்டாதா$^{3}$த்மா பஸ்சாதா$^{3}$த்மா புரஸ்தாதா$^{3}$த்மா த$^{3}$க்ஷிணத ஆத்மோத்தரத ஆத்மைவேத$^{3}$ம் ஸர்வமிதி ஸ வா ஏஷ ஏவம் பஸ்யந்நேவம் மந்வாந ஏவம் விஜாநந்நாத்மரதிராத்மக்ரீட$^{3}$ ஆத்மமிது$^{2}$ந ஆத்மாநந்த:$^{3}$ ஸ ஸ்வராட்$^{3}$ப$^{4}$வதி தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசாரோ ப$^{4}$வதி அத$^{2}$ யேऽந்யதா$^{2}$தோ விது$^{3}$ரந்யராஜாநஸ்தே க்ஷய்யலோகா ப$^{4}$வந்தி தேஷாம் ஸர்வேஷு லோகேஷ்வகாமசாரோ ப$^{4}$வதி ॥ 7.25.2॥**

**சுயம் பற்றிய அறிவுறுத்தல்:** சுயம் கீழே உள்ளது; சுயம் மேலே உள்ளது; சுயம் பின்னால் உள்ளது; சுயம் முன்னால் உள்ளது; சுயமானது வலதுபுறம் உள்ளது; சுயமானது இடதுபுறம் உள்ளது. சுயம் என்பது இதெல்லாம்.

இப்படிப் பார்க்கிறவனும், இப்படிச் சிந்திக்கிறவனும், இப்படி அறிகிறவனும், தன்னில் அன்பு வைத்து, தன்னோடு விளையாடுகிறவனும், தன்னுடன் சேர்ந்து விளையாடுபவனும், தன்னில் மகிழ்ச்சியடைபவனும், அவனே மேலானவன், மேலும் செல்லக்கூடியவன். எல்லா உலகங்களிலும் அவன் விரும்புவது போல.

ஆனால் வேறுவிதமாக நினைப்பவர்கள் மற்றவர்களின் கட்டுப்பாட்டில் இருக்கிறார்கள். அவர்கள் வாழும் உலகில் அவர்கள் இருக்க முடியாது, அல்லது அவர்கள் விரும்பியபடி உலகங்களில் நகர முடியாது

[அதாவது, அவர்கள் பல வரம்புகளுக்கு உட்பட்டவர்கள்].

........................................................................

॥ इति षड्विंशः खण्डः ॥

|| இதி ஷட்3விம்ஸ: க2ண்ட:3 ||

|| இது இருபத்தியாறாவது காண்டம் ||

तस्य ह वा एतस्यैवं पश्यत एवं मन्वानस्यैवं विजानत आत्मतः प्राण आत्मत आशात्मतः स्मर आत्मत आकाश आत्मतस्तेज आत्मत आप आत्मत आविर्भावतिरोभावावात्मतोऽन्नमात्मतो बलमात्मतो विज्ञानमात्मतो ध्यानमात्मतश्चित्तमात्मतः संकल्प आत्मतो मन आत्मतो वागात्मतो नामात्मतो मन्त्रा आत्मतः कर्माण्यात्मत एवेदंसर्वमिति ॥ ७.२६.१ ॥

**தஸ்ய ஹ வா ஏதஸ்யைவம் பஸ்யத ஏவம் மந்வாநஸ்யைவம் விஜாநத ஆத்மத: ப்ராண ஆத்மத ஆஸாத்மத: ஸ்மர ஆத்மத ஆகாஸ ஆத்மதஸ்தேஜ ஆத்மத ஆப ஆத்மத ஆவிர்பா4வதிரோபா4வாவாத்மதோऽந்நமாத்மதோ ப3லமாத்மதோ விஜ்ஞாநமாத்மதோ த்4யாநமாத்மதஸ்சித்தமாத்மத: ஸங்கல்ப ஆத்மதோ மந ஆத்மதோ வாகா3த்மதோ நாமாத்மதோ மந்த்ரா ஆத்மத: கர்மாண்யாத்மத ஏவேத3ம்ஸர்வமிதி || 7.26.1||**

இவ்விதம் படிப்படியாக தாண்டி ஞானத்தையடைந்த ஞானியானவனுக்கு இந்தப்படிகள் எல்லாம் அவன் மீது ஏற்றி வைத்துப்பார்க்கப்பட்டதுதான்.

எல்லாமே என்னிடமிருந்துதான் தோற்றுவிக்கப்பட்டது. அனைத்து ஸ்ருஷ்டியும், லயமும் என்னிடத்தில் இருந்துதான் வந்தது, ஒடுங்குகிறது.

**பார்ப்பவன் பார்ப்பதில்லை** - ஆத்மாவை பார்ப்பவன், மரணத்தைப் பார்ப்பதில்லை. நோயை பார்ப்பதில்லை, துயரத்தை பார்ப்பதில்லை. இவன் எல்லாவற்றையும் தானாக பார்ப்பான், எல்லாவிதத்திலும் தன்னையே அடைகிறான். மனதுக்கு இந்திரியங்கள் மூலம் நல்ல விஷயங்களை

கொடுத்தால் சித்த ஸுத்தி ஏற்பட்டு அடைய வேண்டிய ஞானத்தை அடைவதில் வெற்றியடையலம்.

இப்படிப் பார்க்கிற, இப்படிச் சிந்திக்கிற, இந்த அறிவை உடையவனுக்கு எல்லாமே தன்னாலேயே வரும். உயிர், நம்பிக்கை, நினைவு, வெளி, நெருப்பு, நீர், பிறப்பு இறப்பு, உணவு, வலிமை, ஆழமான அறிவு, தியானம், இதயம், தீர்மானம், மனம், பேச்சு, பெயர், மந்திரங்கள் மற்றும் அனைத்து வேலைகளும் - இவை அனைத்தும் சுயத்திலிருந்து வருகிறது.

तदेष श्लोको न पश्यो मृत्युं पश्यति न रोगं नोत दुःखतां सर्वं ह पश्यः पश्यति
सर्वमाप्नोति सर्वश इति स एकधा भवति त्रिधा भवति पञ्चधा सप्तधा नवधा
चैव पुनश्चैकादशः स्मृतः शतं च दश चैकश्च सहस्राणि च विंशतिराहारशुद्धौ
सत्त्वशुद्धौ ध्रुवा स्मृतिः स्मृतिलम्भे सर्वग्रन्थीनां विप्रमोक्षस्तस्मै मृदितकषायाय
तमसस्पारं दर्शयति भगवान्सनत्कुमारस्तं स्कन्द इत्याचक्षते तं स्कन्द
इत्याचक्षते ॥ ७.२६.२ ॥

**ததே3ஷ ஸ்லோகோ ந பஸ்யோ ம்ரு’த்யும் பஸ்யதி ந ரோக3ம் நோத**
**து:3க2தாம்**
**ஸர்வம் ஹ பஸ்ய: பஸ்யதி ஸர்வமாப்நோதி ஸர்வஸ இதி**
**ஸ ஏகதா4 ப4வதி த்ரிதா4 ப4வதி பஞ்சதா4**
**ஸப்ததா4 நவதா4 சைவ புநஸ்சைகாத3ஸ: ஸ்ம்ரு’த:**
**ஸதம் ச த3ஸ சைகஸ்ச ஸஹஸ்ராணி ச**
**விம்ஸதிராஹாரஸுத்3தௌ4 ஸத்த்வஸுத்3தௌ4 த்4ருவா ஸ்ம்ரு’தி:**
**ஸ்ம்ரு’திலம்பே4 ஸர்வக்3ரந்தீ2நாம் விப்ரமோக்ஷஸ்தஸ்மை**
**ம்ரு’தி3தகஷாயாய தமஸஸ்பாரம் த3ர்ஸயதி**
**ப4க3வாந்ஸநத்குமாரஸ்தம் ஸ்கந்த3 இத்யாசக்ஷதே**
**தம் ஸ்கந்த3 இத்யாசக்ஷதே ‖ 7.26.2‖**

அதாவது, '**தன்னை உணர்ந்தவன் மரணத்தைக் காண்பதில்லை**'. அவருக்கு நோயோ துக்கமோ இல்லை.

அத்தகைய, 'பார்ப்பான் எல்லாவற்றையும் [அப்படியே] காண்கிறான், மேலும், எல்லாவற்றையும் [அவன் விரும்புகிற வழியில்] அடைகிறான்.' அவன் ஒருவன் [அதாவது, படைப்பிற்கு முன்; ஆனால் படைத்த பிறகு], அவர் மூன்று வடிவங்கள், ஐந்து வடிவங்கள், ஏழு வடிவங்கள் மற்றும் ஒன்பது வடிவங்களில் இருக்கிறார்.

மீண்டும், அவர் பதினொன்று, நூற்றுப் பத்து, மற்றும் ஆயிரத்தி இருபது வடிவங்களில் இருக்கிறார்.

தூய்மையான உணவை ஒருவர் சாப்பிட்டால், ஒருவரின் மனம் தூய்மையாகும். மனம் தூய்மையாக இருந்தால், ஒருவரின் நினைவாற்றல் வலுவாகவும் நிலையானதாகவும் மாறும்.

நினைவாற்றல் நன்றாக இருந்தால் எல்லா பந்தங்களிலிருந்தும் விடுபடுவார்.

மதிப்பிற்குரிய சனத்குமாரர், நாரதரின் அனைத்து குறைபாடுகளில் இருருந்தும் அவரை விடுவித்து, இருளுக்கு அப்பால் [அதாவது அறியாமையிலிருந்து, அறிவு ஒளிக்கு] அழைத்துச் சென்றார்.

ஆகவே, இங்கு **இருப்பதெல்லாம் இறைவனே!** என்றும், அதுவே, **பூமா** என்றும், அந்த பூமாவே **நான்** என்றும், தன்னை அறிவதே **ஆன்ம ஞானம்** என்றும் அறியப்படுகின்றது.

## இத்துடன், பூம வித்யா நிறைவுற்றது.

## **ஓம் தத் ஸத்!**

# பூம வித்யா



## [சாந்தோக்ய உபநிஷதம் - அத்தியாயம் ஏழு]

V சாகா சந்திர நியாயம் என்ற மூன்றாம் பிறையை தெரிந்துக் கொள்வதற்காக மரக்கிளையைக் காட்டி பிறகு தெரிய வைக்கும் உத்தி.

V ஆனந்தம்தான் பிரம்மஸ்வரூபம் என்று எடுத்துக்கொண்டு, அந்த ஒன்றேயான பிரம்மத்தை உணர வைத்தல்.

V பிரம்ம ஞானத்தை அடைய வேண்டுமென்றால், அதற்கு தக்க சத்குருவின் உபதேசம் மூலமாகத்தான் முயற்சி செய்ய வேண்டும்.

V இதை அறிய விரும்பும் நடுநிலை அதிகாரிகளுக்கு சில அடிப்படைப் பண்புகள் தேவை, அதையும் இந்த அத்தியாயத்தில் விளக்கப்படுகிறது.

V சாதகன் அல்லது மாணவன் குருவிடம் எப்படிப்பட்டவனாக செல்ல வேண்டும் என்பதையும் இந்த வித்யை எடுத்துரைக்கிறது.